# முப்பெரும் அந்தாதி

## அந்தாதி திரிவேணி - Anthaathi Triveni

- தெய்வநாயகி அந்தாதி
- திருவேற்காடு கருமாரி அந்தாதி
- மாங்காடு காமாட்சி அந்தாதி



குடந்தை குருஜி

Translated by
Prof. Dr. S.A. SANKARANARAYANAN

# முப்பெரும் அந்தாதி

(அந்தாதி திரிவேணி)
(Anthaati Triveni)

1. தெய்வநாயகி அந்தாதி
2. திருவேற்காடு கருமாரி அந்தாதி
3. மாங்காடு காமாட்சி அந்தாதி

குடந்தை குருஜி

*Translated by*
**Prof. Dr. S.A. Sankaranarayanan**

சிவகுருநாதன்
செந்தமிழ் நூல் நிலையம்
41, பேட்டை நாணயக்காரத் தெரு
கும்பகோணம் 612 001

நூல் விவரக் குறிப்புகள்

*நூல்*
முப்பெரும் அந்தாதி
தெய்வநாயகி அந்தாதி
திருவேற்காடு கருமாரி அந்தாதி
மாங்காடு காமாட்சி அந்தாதி

*ஆசிரியர்*
குடந்தை குருஜி

*Translated by*
**Prof. Dr. S.A. Sankaranarayanan**

*பதிப்பு*
முதற் பதிப்பு : ஜூலை 2021

*பக்கங்கள்*
104

*வடிவமைப்பு மெய்ப்புத் திருத்தம்*
விழிகள் தி. நடராசன் - 9444265152

*மின் அச்சு*
வெல்கின் கணினி - சென்னை - 600 041
9444535771

*அச்சிடல்*
பிரிண்டெக் இண்டியா
சென்னை - 600 005

*வெளியீடு*
சிவகுருநாதன்
செந்தமிழ் நூல் நிலையம்
41, பேட்டை நாணயக்காரத் தெரு
கும்பகோணம் - 612 001

**இந்நூல் விற்பனைக்கு அன்று.**
**தனிச்சுற்றுக்கு மட்டும்**

# முன்னுரை

அந்தாதி என்பது பொதுவாகக் கட்டளைக் கலித்துறையிலும் வெண்பாவிலும் பாடப்பெறும் வடிவம். கட்டளைக் கலித்துறையில் பாடப்பெற்ற மூன்று அந்தாதிகளும் முறையே 1968, 1971, 1982 ஆகிய ஆண்டுகளில் பாடப் பெற்றவையாகும்.

1970இல் மகாப் பெரியவாள் ஜகத்குரு சங்கராச்சாரியார் அவர்களுக்குத் தெய்வநாயகி அந்தாதியை அனுப்பி வைத்தேன். அவர் அதற்கொரு ஆசியுரை வழங்கினார். அதன் பின்னர் 1985இல் காஞ்சி சென்று மாங்காடு காமாட்சி அம்மன் அந்தாதியை நேரில் வழங்கினேன். நவராத்திரி சமயமாதலால் விரதம் பூண்டிருந்த பெரியவாள் அதனையும் படித்துப் பார்த்து ஆசியுரை வழங்கினார்.

ஆங்கிலப் பேராசிரியர் முனைவர் எஸ்.ஏ. சங்கரநாராயணன் இம்மூன்று அந்தாதிகளையும் படித்து உணர்வு மேலிட்டு அந்தாதி வடிவிலேயே ஆங்கிலத்தில் உடனே மொழிபெயர்த்து அனுப்பினார். அவற்றை இந்நூலில் இணைத்துள்ளேன். அவருக்கும் என் நன்றி உரியது.

இந்நூலைப் படிப்போர் அம்மனின் அருள் பெறுவாராக.

**குடந்தை குருஜி**

# தெய்வநாயகி திருவந்தாதி

(குங்கும சுந்தரி)
(Kunkuma Sundari)

# தெய்வநாயகி திருவந்தாதி

விநாயகர் காப்பு

வேழ முகத்து விநாயகனை நெஞ்சினில்
ஆழப் பதித்துநான் அந்தாதி சூழ்வினையால்
பாடிட நின்னைப் பணிந்தேன் பரம்பொருளே
நாடினேன் நன்மை நயந்து.

★★★

திருவுடை நாயகி செந்தமிழ்ப் பாவாய்; திகழ்ந்தொளிரும்
உருவுடை யாய்எம் உளத்தில் பொருந்தி உலவுகின்ற
மருவுடை மண்ணில் மலர்க்கொன்றைச் சூடிய மாமலரோன்
அருகுடை ஐரா வதனுறை ஈச்சுரத் தம்பிகையே 1

அம்பொன் திகழ அகிலம் வலம்சூழ ஆடவல்லான்
செம்பொன் சடைமேவும் திங்கள்சூழ் பெருமான் சிறப்படைய
பைம்பொன் கழல்சோழன் பேர்கொண்ட ராச புரந்தனிலே
எம்பொன் னகர்தாம் இலங்கப் பொலிவுடன் ஏற்றவளே 2

ஏகத்தாள்; ஏழிசை யாள்; ஈசன் இன்புற் றெழிலுறையும்
பாகத்தாள்; பால்மொழி யாள்;எம் மனத்தில் பதிந்தகார்சூழ்
மேகத்தாள்; மேதினி மேனின்ற மேனியாள்; மெல்லசைவின்
ஆகத்தாள்; பாலிப்பாய் ஆற்றல் அருள்கின்ற அங்கண்ணியே 3

கண்மணி ஆகிக் கருத்தாய் உள்ளத்தில் கலந்துநின்ற
பெண்மணி; பேரின்பப் பேடே; பெருமைகள் பெற்றிலங்க
ஒண்மணி யாகி உளத்தில் ஒளிர்ந்தநல் உத்தமியாய்
விண்மணி யாகி விளங்கிட வந்தாய் நலம்தரவே 4

# DEIVANAYAKI TIRUVANTHAATI

## Invocation to Lord Ganesha

Elephant Face Vinayaka, I keep
deep in heart, to sing anaphoric
by good deed, bow to Supreme
You, I do, seeking sweek sense.

★★★

1 O, goddess Weal, Opulent Tamil incarnate, famed gleaming
mien of lustre, poised in my heart; lingers your loveliness;
on this obsessive earth cassia adorned Lotus-borne
Airavateswara abides close to you, you, His consort!

2 Consorting with the expert Dancer Lord with worlds whirling round,
with crescent moon upon his golden matted locks, in all glory,
in the city of Rajapuram, laid out by gold anklet adorned Chola king,
you have deigned to grace in elegance the auric shrine known!

3 One with ONE, you are all seven-fold notes of music; abides Lord in joy
on your Right; milk-sweet is your speech; posited in our hearts as nestling
cloud of Mercy, Mien upon the excelsior sthala of Earth, gentle stirs your frame;
O, fair eyed power of grace granted, may you protect us!

4 As pupil of eye, as concept within, mixed inseparable are you
our Lady. O Bliss Bird of Bounty. For greatness to gain,
you glow in the adytum of heart as a lustrous gem, sublime
as star in the welkin prospecting goodness to grant;

நலம்தரும் நாயகி; நம்மைப் பிணிக்கும் நலிவகற்றிக்
குலம்தரு வாகிக் குணமேவச் செய்யும் குலமகளாம்
பலம்தரும் பார்வதி; பாகத் துறைந்த பரமனொடு
வலம்வரும் வானிதி; வந்திங் கெமக்கு வரமருளே 5

வரங்கள் தருவாய்; வணங்கிடும் யாவர்க்கும் வாகைதரக்
கரங்கள் குவித்துக் கதியாய்த் துதித்துக் கனிவுடனெம்
சிரங்கள் குனியச் செகத்தினில் நல்லன தந்தருள்வாய்
புரங்கள் எரித்த புனிதனைச் சேர்ந்தநற் பூரணியே 6

பூரணி உன்பாதம் போற்றிப் பணிவார்க்குப் பேரறமும்
காரண மும்கா ரியமும் கதித்திங்குக் கைகொடுக்கும்
தாரணி மார்புடைத் தாரா சுரத்துறை நாயகியுன்
சீரணி சேர்ந்திடச் சேரும் புகழதைச் சிந்திப்பதே 7

சிந்திக்கச் செய்கின்ற சீரடி சீர்பெறச் செப்புகிறேன்
வந்திக்கச் செய்கின்ற வஞ்சனை உள்ளத்தை மாற்றியிங்குப்
பந்திக்கு முந்துவார் போலத் தொடர்வேன் பதந்தொழவே
நிந்திக்கச் செய்வாயோ சித்தமும் என்மனம் நீடியதே 8

நீடிய நன்மை நிமலையைப் போற்றிட நித்தமும்யாம்
பாடிய பாடல் பயனாய் உளத்தில் சுடர்ந்தொளிரத்
தேடிய நல்லறம் சார்ந்தேன் திகழ்ந்திடும் தேவியுன்றன்
கோடிக் கருணைக் கொடையால் குவலயம் காத்தருளே 9

காட்டும் குவளையங் கண்கள் கனிவாக்கும்; கையெழுதித்
தீட்டும் அமுதமாய் சொற்கள் களிப்பாக்கும்; தீந்தமிழில்
நாட்டும் இனியன நாட நலமாக்கும் நாளுமிங்கு
வாட்டும் வினைகளை மாற்றி வரந்தரும் மங்கலையே 10

மங்கலப் பூணணி மார்பினள்; மாசற்ற மங்கையரின்
பொங்கும் உளத்தினில் பூத்திடும் தாமரை; பொற்சடையன்
தங்கும் புனையாகம் தாங்கிடும் பொற்கொடி; தாரணியில்
பங்க மிலாது பரிசுகள் தந்த பருப்பதையே 11

5 Granting good are you, o, goddess, dispelling the afflicting dearth that beset us,
you turn as the Tree of our clan, evolving us as the clan deity offering
fruit as Parvathi; dwelling on the Left of the Supreme one, you confer
valiance as the celestial forte. May you descend to bestow on us boons!

6 Boons you grant to all that bow unto thee for laurels to come by;
to all that with folded arms pray seeking refuge, with heads hung
humbled imploring your mercy, you offer all good on earth and grace forth.
O, Perfect Uma empowering Lord that ashed the triple citadels!

7 Dwells our thought on your glory as we join your happy flock
of aspirants,you, governing with garland of victory in Darasuram,
giving a helping hand to exalt the submitting ones who propitiate
your fair feet praising their perfect chores and scores!

8 Core science of mystery your grace conferring feet that make all meditate,
let me recount: Changing the deceit-laden heart, let me hie unto the feast
of telling it mouth-fully as would rush one hungry to fall in to eat.
Would you loathe my advance to hail your feet? Daily my heart waits on and on!

9 Onward good grace flawless thine, as I do praise, like the fruit of a song a day,
in my heart you glow as flame fulgurant, for me to follow virtue thereon.
O, My deity with compassion immense given in enormity, wont you check
and check in to protect the twirling world on show?

10 Showing nenuphar bloom like eyes are fruity relish; words handwritten
draw ambrosia to delight; the sweet declared in dulcet Tamil, when chanted
breed well-being; ever boon granter auspicious One, deign you may
to treat and refine the muck of our dinghy ditching deeds!

11 Ease of comfort decked stays on your bosom in bejeweled cover; you are the lotus
abloom in spotless women's hearts; gold liana carrying the burden
of auric locks rich Lord on your frame; on this wandering world you have given
gifts worthy, withholding never, to all as behooves you, O, Mountain Daughter!.

பருப்பொரு ளாயும் பணிவோடு பண்ணுடன் பாடுதற்குக்
கருப்பொரு ளாயும் கனிந்த கருணையால் காணுகின்ற
திருப்பொரு ளாகவும் செம்பொரு ளாகவும் சேர்ந்தருளைத்
தருபொரு ளாகவும் தந்திட வந்தாயோ தாரகையே 12

தாயே தயாநிதி தண்ணளி நல்கிடும் செவ்வியளே
நாயேன் உலகில் நலிந்தும் மெலிந்தும் நினைவிழந்தும்
நீயேன் இனியுமென் நெஞ்சம் புகவில்லை; நித்தமும்யாம்
ஓயேன் உனையே உணர்தற் கெளிதோ உமையவளே 13

உமையவள் எண்ணிட ஓங்கும் அறங்கள் உலகுக்கொரு
சமயமாய் நின்றவள் சாக்கதம் கற்றவர் சார்ந்தநெஞ்சில்
அமர்பவள் விண்சூழ் அமரர்கள் போற்றிடும் ஆனந்தியே
இமயமாய் நின்றென் இதயத் தொளியாய் இருப்பவளே 14

இருளாகி நின்ற இதயத்தை மாற்றி இனிமைதரும்
பொருளாகி நின்று புகழ்பாடச் செய்த புனிதையவள்
மருளாக வந்து மருட்டும் வினைகளை மாற்றிமண்ணில்
அருளாகக் காட்சி அளிப்பாளென் ஆயிழை அற்புதமே 15

அற்புதம் நல்கும் அணங்கே அறஞ்செயும் அன்பருக்குக்
கற்பக மாகிய காரிகை எம்மையே காத்தருள்வாய்
நற்பத வாழ்வை நயந்து வழங்கிட நானுனது
பொற்பதம் நாளுமே போற்றி வணங்குவேன் மாதவளே 16

மாதவம் செய்து மணியென நெஞ்சில் பதிந்தவளைக்
காதல் கசிந்துகை கூப்பித் தொழுதிங்குக் காலமெல்லாம்
ஓதற் கினியாளை உன்மத்த னாகியே ஓதியிங்கெப்
போதும் மறவேன்நான்; போதாகிப் பூத்திடும் பெண்கொடியே 17

பெண்கொடி யேநின் பெருமைகள் ஓங்கிட மண்ணிடையே
ஒண்கொடி யாகி, ஒளிர்கொன்றைத் தாரோன் உவந்தணைக்கும்
தண்கொடி யாகித் தழைக்கும் வயல்சூழ் சுரத்தமர
விண்கொடி யாக விசும்பிடை வந்தாயோ வீங்கொளியே 18

12 Terse as single Ens, now gross, now subtle micro, now compact in view
for the discerning seers, now as poetic prime conceived, now showing
as weal in form, now fabled as singular eminence, you in Darasuram
soar as luminous flame-petals of the heart-lotus all the more there!

13 Mother..!,O, Main of Mercy!, Sanguine sublime granting cool might!
Me a low cur, in this world live on lean days, weakened, frail, forgetting
your grace; why haven't you still given me the content my heart wants;
never all day I tire but ever chant naught else than but you, O,Uma!

14 Uma! the thought thought, virtue soars; She for Sakthas has stood as a more
of Faith in this world; in hearts given to temple her, She abides sure;
O, Sky thronged immortals praise you, Lady. Won't you rear up
like himalaya within the cave of my heart as lectern Light!

15 Light Ens of sheer sweet altering the heart all murk in chambers,
indeed she is sanctimony that made me sing her praise;
the deeds that frighten as curses she chases away
and reveals her grace, she my well adorned Miracle She!

16 Miracle performer She! For those poised in virtuous acts as servitors
She indeed is Kalpaka Tree, Divine Lady. May she protect and grace.
O, Uma Dame of askesis, let me daily praise thy auric feet pair
for you to grant me life long a path of goodly ways on your own!

17 Owned in the innards of my heart as a gem gotten by Tapas great,
I with love profuse oozing, folding my arms in worship, all time chant her
so sweet to chant and turned a zealot in reflex to chant more and more!
how may I forget. O bud deflowering in warmth as climber-lass!

18 Lass of Liana for your greatness to soar up to be known, haveyou turned up
on Earth as a flashing creeper,for the gleaming cassia garlanded Lord to hug you
ever in delight to cling to amid the fields-girt Darasuram, and abide there
as celestial standard in the cerulean, Have you, O luxuriant light come thither?

வீறுகொள் அந்தரி மேவும் விளங்கொளிர் வித்தகியென்
கூறுபா டிலாத நெஞ்சம் இனியும் குறைவிலதாய்
மாறுபா டிலாத வாழ்வில் மன்னிய மகிழ்ச்சிதனை
வேறுபா டின்றி வழங்கிட வாழ்த்தினேன் வானவளே 19

வானவள் வையத் துறைபவள் வல்வினை மாற்றிடவே
தானவள் செய்யும் தருமம் தழைத்திடத் தண்ணளிக்கும்
தேனவள் தாரா சுரம்வந்த தெய்விக நாயகியென்
ஊனவ வாழ்வினை மாற்றும்நாள் எந்நாள்? உளத்தவளே 20

உள்ளக் கிழியில் உருவம் வரைந்த உணர்வினளே
தள்ளற் கரிய கருணை சுரக்கும் தயாபரையே
வெள்ளப் புனலாய் விரிந்தன்பர் உள்ளத் திருப்பவளே
தெள்ளத் தெளிவாய்த் திகழும்நற் காட்சியைத் தந்தருளே 21

அருள்சூழ் அகந்தனில் அன்பும் அறனும் அகலுமோ?இப்
பொருள்சூழ் உலகில் புகுந்தவென் நெஞ்சம் பொருந்துமோ?இம்
மருள்சூழ் வினையால் மயக்கி எனையே மருட்டுமோ?பொய்
இருள்சூழ் பிறவி இடர்தரு மோ?எம் இறையவளே 22

இறையே இராசரா சத்துறை வந்த இனியவளே
பிறையே அணிந்திடு பெம்மான் உவப்பே; பிறவியெனும்
துறையேற மாட்டாமல் சிக்கித் தவிக்கும் சிறு பொருளாய்க்
கறையே படிந்த பிறப்பைக் கரையேற்ற வந்தவளே 23

வந்தே வரங்கள் வழங்கிடும் வானதி, வான்முகிலாய்த்
தந்தே கருணை தளிர்த்திடும் தாரா சுரத்தவளே
செந்தேன் தமிழாய்ச் சிலிர்த்திடும் தையலே சோர்ந்துலகில்
நொந்தே விழினும் நொடிபல தாக்கினும் காத்தருளே 24

காட்சியில் கண்டு களிப்புற நெஞ்சில் கலந்துறைய
மாட்சியில் நாளும் மனமே மகிழ்ந்து மதிப்புயர
ஆட்சியில் நின்றே அகத்திருள் நீக்கிடும் ஆரணங்கை
நீட்சியில் கண்டேன்என் நெஞ்சில் நிலைத்திடும் காவியமே 25

19 There you are as Lady all powered valor with abounding lumen.
O Talent,May my heart unbroken hence with nothing more to want,
be steadfast in life defying change for the worse, and I praise you
to bless me with blithe without indifference for life, O, heavenly One!

20 One heavenly yet stationed on Earth in mirth to annul all ill deeds;
for the virtuous acts to flourish she is melic honey elixir; she is down
to Darasuram as DeivaNayaki. Which day might she alter my ungodly
flesh-prone mess of life for the sublime? By when, O Dame Cordial!

21 Dialed Form drawn perfect in the pouch of heart with the feel are you;
replete with compassion in mercy excelsior unforsaking are you;
flood in spate in the servitors' hearts are you;crystal clear in ken
as pellucid presence are you to grace ;

22 grace nestling heart , would that beat ever without love and virtue?
Or would it take to this material mundane stuff as its mainstay?
Or might it work oracles with the murk of deeds and frighten me?
O, Lord and Consort in Darasuram deign to dictate!

23 Aye, Total Sweet glowering on the portals of Darasuram! Aye Summary Delight
of crescent brooch adorned Siva's crest! Aye, as Emergent help to haul me up,
the drowning tiny tainted thing of me vexed in the vortex of birthing pool,
stroke-less to swim, or slack and shy to be shored up, welcome!

24 Come have you to confer boons on me? O Celestial Creatrix, as the scud
of the sky your shoots of mercy may you send as sap to my roots to sprout.
O, Darasuram Dweller! O, Belle in honey Tamil form, won't you redeem
the fatigued, fallen, woe-stricken, crippled, case of me, by thy grace;

25 graceful gentle Maid in you, in reign to remove the dark, when may I behold?
When receive the mature gift of a mind poised in the honors
of ecstatic cogitation commingled with heart's flow and beat, throbbing
in scenes tremendous?When, O, my cordial Epic Star?

காவிய நாயகி கற்பகச் செல்வி கமழ்ந்திடும்உன்
நீவிய கூந்தல் நிறைந்தோய நின்னை நிமலனவன்
மேவித் தழுவிட மெல்லிய ஊடலில் வந்தனையும்
தேவி புனையே தொழுவார்க் குலகில் துயரிலையே 26

துயரிலா வாழ்வில் சுகமே துலங்கிடத் தூய்மையுடன்
அயர்விலாத் தொண்டர் அருளிற் கரைந்தே அகங்குழைய
மயர்விலா நுன்னை மனத்தால் வணங்கிட மண்ணிடையாம்
உயர்விலா நாளும் உளதாமோ? உள்ளத்தின் ஊற்றவளே 27

ஊற்றிய நெய்யாய் உருகிய துள்ளம்; உனைநினைந்து
போற்றிய பாடல் புகழினைத் தந்தது; போர்க்குணத்தை
மாற்றிய நின்செயல் சேர்த்தது பத்தி; மலருறைந்து
வீற்றிடும் தெய்வம் வழுத்திட யாவையும் வென்றவளே 28

வெல்கின்ற காதலால் வெண்ணீ றணிந்தவன் மேனிதனைக்
கொல்கின்ற வேல்விழி காட்டிக் கவர்ந்தாய் குவலயத்தில்
சொல்கின்ற நின்புகழ்த் தேனெனத் தித்தித் ததே;நடந்து
செல்கின்ற தாமரைச் சேவடி யால்மனம் சித்திக்குமே 29

சிந்துகள் செய்யவோ சேர்ப்பித்தாய் என்னை; செகம்தழைக்க
வித்தான வேத முதல்வியே தாரா சுரத்தமர்ந்து
பித்தான உள்ளம் பிதற்றித் திரிந்துனைப் பின்தொடர்ந்து
பத்தியால் நெஞ்சில் பரவசம் ஆகிப் பதிந்திடுதே 30

பதித்த மனமொன்றிப் பாடல் புனைகின்ற பாங்கினையும்
துதித்த அடியார் தொழுதிடத் தூநெஞ்சில் காட்சியையும்
விதித்த விதிமுறை மாறாமல் போற்ற விடியலதில்
உதித்த கதிராய் ஒளிர்வார்கள் அன்னையை ஓதுவரே 31

ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாய் உலகதனில்
ஆதியாய் வந்தவள் அந்தமாய் நின்றவள் ஆலமர்ந்த
வேதியன் பாக முறைந்தவள் மாதவள் மென்மலர்ப்பொற்
பாதம் தொழுவார் பயனுற வாழப் பணித்தருளே 32

26 Star of Epic grandeur,opulent KalpakaTree! Your fragrant locks lower
to touch this anima mundi; and the Flawless ONE embraces you
in tender bouderie whence you the Devi in descent come forth for the chosen
worshipers born freed, for whom safe is their world with zero sorrow!

27 Sorrow free life is sheer joy to celebrate; in the course of such life
lived through, if the servitors in ceaseless practice and purity
go merged in the main of grace and bow unto you,
would ever a single day draw to a close without triumph? O,Fount within !

28 Within the heart melts as poured stream of ghee; hymns hymned
in thy thought gave haloed fame; the power thine that civilized
the savage instincts cultured bhakti; O, All Conquering Uma
worshipped by Lotus-borne Brahma even!

29 Even with triumphant love you made the white argent ash- adorned mien
of Lord showing your spearing eye ravishing him; in the twirling Earth,
thy fame is relish akin to the mellifluous honey; on thy gait
with the lotus feet that walk in steps Manam shall gain mastery!

30 Master miracles did you send me here to? O, Seed Letter
of the Primordial Veda for the worlds to flourish!
Abiding in Darasuram, you are and my heart in a fit of craze
follows as haloed ghost in bhakti beating fast in ecstasy!

31 See they that chant Mother shall beam like dawn Sun in ascension
who praise as ordained the glory and the scenes that slide across
the servitors' pure hearts and who the style of faith fancied
in poesy with mind set firm on her feet!

32 Feet auric tender flower soft of hers that are hailed by they may live
fruitfully as she would have them submit; for she is part the Vedic
seated beneath the Kallaal tree, the primordial beginning, the Entelechy,
easy to chant yet dear to grasp in this spiritus mundi ineffable!

பண்ணிய தீவினை பற்றுமோ? பாசத்தில் பாங்குடனே
எண்ணிய நல்லெண்ணம் என்னையீங் கேற்குமோ? என் மனத்தின்
திண்ணிய பக்திக்குச் சோதனை நேருமோ? இத்தலத்தில்
புண்ணிய நற்றவப் போதாகிப் பூக்கின்ற பூங்கொடியே 33

பூவினள்; உள்ளம் புதுமலர்த் தேனாய்ப் பொழிந்திடும்நற்
காவினள்; கற்பகக் காடுறை செல்வி; கடவுளராம்
நாவினள்; பூமகள் நங்கையர் போற்றிட நெஞ்சமதில்
மேவினள்; மேன்மை விளங்கிடும் நன்மைகள் தந்திடவே 34

தந்தைஎன்? தாய்என்? தமர்என்? தமக்குத் தருநிழலாம்
முந்தை வினையால் முகிழ்த்த மனைவிஎன்? மக்களும்என்?
விந்தை உலகில் விரைகின்ற கூத்தும்என்? வல்வினைஎன்?
சிந்தை களித்திடச் செந்தமி ழாய்நீ நிலைத்தபின்னே! 35

ஏது மறியாத ஏழையேன்; நெஞ்சம் இனியுனது
பாதம் தொழுது பவக்கடல் நீக்கும்; பதமுணர்ந்தே
ஓதும் கவிப்பொருள் உன்னை உணர்த்த உளங்கனிந்து
நாதம் சிறக்கவுன் நற்புகழ் பாடினேன் தூயவளே 36

தூய்மைச் செயல்கள் துலங்கவும் மேன்மை தொடர்ந்திடவும்
வாய்மை ஒளிரவும் வாழ்வினி ஓங்கவும் மண்ணிடையே
நோய்மை தனிலெனை நோகாமல் செய்வாய்; நுதல்விழியாய்
தாய்மை சுமந்த கனியேநற் தாரா சுரத்தவளே! 37

சுரத்தவள் நீக்குவாள் சோர்வினை; நாளும் சுகமளிக்கும்
கரத்தவள் காட்டும் கருணைக் கடலாய்க் கனிந்தவளென்
சிரத்தவள் வைக்கின்ற செவ்விய சீரடி சேர்ந்தொளிர்நா
புரத்தவள் வாழ்த்தப் புகழது மேவிடும் பூவினமே 38

பூவிற்குள் தேனாகிப் புத்தமு தாய்ப்பொங்கிப் போற்றிடும்நற்
பாவிற்குள் இன்பம் பயந்திடும் பாவையே; பக்தியெனும்
காவிற்குள் வண்டாய்க் களிக்கின்றேன் காதலால் கஞ்சமலர்
நாவிற்குள் முன்வந்து நற்றமிழ்ப் பாட நயந்தருளே! 39

33 Built in anguish of conscience cries: would the dire deeds ditch?
Or, good thoughts meet might condone me in the flock? Or, the stubborn Bhakti
of mine would succumb to trial? O, Flower Creeper in spray
on this kshetra overgrown as virtue bred finer askesis,do sign!

34 Sign of all flora is she; heart of fragrance proper to new floral honey is she;
living in the groves of Kalpaka woods she, the virgin; and her tongues
are divine deities; the maidens of this Earth praise her, and she prevails
in our hearts to grant all lofty goodness to woo!

35 Who my Father , who mother,who then kin, who my spouse by deeds
prior in births bygone , a tree to shelter me as if, who all children,
what the vagaries of hasty world after all, or the tough deed and fruit
thereof once you sprout my thought to shoot in Tamil Pristine for me to know!

36 Nothing I know, low poor me, mine heart hence is all but thine; hailing Feet
may I cross the birthing sea; feeling thy foot-steps whatever I hymn
in poetic truth is but to glimpse thy glory with mellowed innards
to pluck and strum the chord to hum in pitch thy renown, O,Pure ONE!

37 Pure acts to merit, and loftiness to continue,verity to highlight,
life henceforth to soar up,on this Earth may you set me free
from all that ail and sicken me. O, One with metopic eye, with vision
and Motherly concern! Thou art indeed the fruit to bear for Darasuram's here!

38 here in sylvan groves is she; here fatigue she removes; her arms reach
to comfort all day long; here shows her Mercy main in fruity juicy succulence;
here upon my head placed she her numinous Noopuram ringing feet
to bless as famed floral spray releasing the light within!

39 Within the flora is she honey; turns nectar soon;swells in the well wrought verse
as joy breeding lass of grandeur; me as a bee in the arbors of bhakti flit
and fly drunk with suck of love;alight on my tongue of lotus on your own
to help me psalm in Tamil with grace, O, dear!

நயனொடு வாழ்த்திடும் நாயகி; செந்திரு நாரணனும்
அயனொடு நாமகள் ஆலமர் செல்வனும் அண்டமெல்லாம்
பயனொடு வந்து பராபரை உன்னைப் பரவுவார்க்கு
வியனொடு வெற்றியைச் சேர்ப்பிக்கும் தாரா சுரத்துருவே 40

உருவில் திகழ்ந்திங் குனையானும் எண்ணி உளமுருகி
கருவி லிருந்தநற் கால முதலாகக் காதலுடன்
மருவிலா நெஞ்சினில் வைத்திங்கு மண்ணில் மகிழ்வுபெறப்
பொருவில் படைகொண்டு போரினில் வென்றதுன் பொற்கரமே 41

ஏகமும் பாகமும் ஏற்றமாய்க் கொண்டநல் லேந்திழையே
ஆகமும் பக்தியில் ஆழமும் காண அனுதினமும்
வேகமாய் உள்ளம் விரைந்துன் கழலடி வேண்டினேன்அத்
தாகமும் கொண்ட தவமும் தணியாத காதலுக்கே 42

காதல் கசிந்து கரதலம் ஒன்றாக்கிக் கண்பனிப்ப
மோதும் துளிகள் முகிழ்த்து முழுதுமாய் மெய்சிலிர்ப்ப
ஓதும் கவிதை உனையெண்ணி நாளும் உளங்களிப்ப
வேத விழுதாய் விளங்கி உளத்துள் மலர்ந்தவளே! 43

மலரும் முகமும் மதியாய் ஒளிர்ந்திட மாண்புடனே
அலரும் அணியும் அணியாய்த் திகழ்ந்திடும் அன்பினளைப்
பலரும் தொழுது பெறுவர் பயன்பல; மண்ணிடையே
உலரும் சருகாய் உதிரவோ வாழ்க்கை? உரைத்தருளே 44

உரைகள் கடந்தன உன்புகழ் கூற; ஒலிகடலின்
திரைகள் கடந்தன தேசொளி பத்தி; திளைக்குமின்பக்
கரைசேர்ந் திடக்களிக்கும் காட்சி கண்டு கருணைதனை
வரையெனத் தந்திங்கு வாழ்வு சிறந்திட வந்தவளே 45

வனைகின்ற பாண்டமாய் மானிடத் தோற்றம் மனத்தினிலே
புனைகின்ற வேடத்தில் பொய்யான கூத்துப் புரிவதற்கு
முனைகின்ற போது முகமலர்ப் புன்னகை மௌனமாக்கி
நனைகின்ற அன்பால் நடத்துமுன் நாடகக் காட்சியென்னே 46

40 Dear Form of Darasuram promising to grant laurels to all that hymn thy glory,
and donating grace to dwell in fruitful plenitude, all these worlds;
you as supreme of supremes are one with a glance for all the fair Naranan,
Ayan, and the opulent Siva seated beneath the kallaal tree to bless

41 Blessed mien is yours; even thoughtless I, could think on you with heart melting,
right from the prenatal start recalled, with much much love, treasuring you
in innocence,in my corset, delighted on Earth, to view you ever wielding
the cane sweet brows to arch the worlds all!

42 All adorned maiden as ONE and Part of the unique ONE for good!
To envision the aagamic mien thine and to fathom the deep secret
of bhakti day after day I pined and prayed your kazhal decked feet,
in never slaked thirst and unabated askesis in love!

43 Love moistened;arms conjoined enfolding; eyes trickle dews;
tears bud, the whole frame aroused in horripilation staggering;
as plait of Vedas may chanted verses fall in all day to trigger
the heart possessed of you, to grace forth deflowering!

44 Flowering face, likens moon of coolth and in honor the declaring jewels
deck the parts in full overflowing with love; so looks she
for many a seeker to worship and find many a fruit;
is life destined to wither without you? Enlighten by word!

45 Words bye-pass to phrase your glory; the luminous sheen of yours
exceed the silver waves of gurgling main of bhakti; ah you have come
to grant life an orgy of wallowing and getting shored up under
the auspices of mercy thine mounting up in ranging shape!

46 Shapely vessel of a form is human; a pottery; in this imagined fancy role
to dance aghast a pseudo chore, even as one tends to perform,
face blossoms forth a slim smile;then silencing of a sudden
to souse with love you enact your play, what may that be!

என்னே வியப்பிது எங்கும் உறையும் இறையவளே
பொன்னே அனைய பதமும் இமயவான் பொற்கொடிதன்
மின்னேர் இடையும் மிளிர்நடை யுங்காட்டி மேதினியில்
தன்னேர் இலாத தலைவிநீ நன்மை கொடுத்தருளே 47

கொடுக்கும் கருணைக் கொடையால் உனது குவலயத்தில்
விடுக்கும் அடியார்கள் விண்ணப்பம் இட்டவர் வேண்டுகின்றார்
தொடுக்கும் மலர்ப்பாவால் தூவித் தொழுகின்றார் தூயவளே
அடுக்கும் வினைத்தீ அகல வருமுன் அருஞ்செயலே 48

செய்யும் செயல்கள் சிலவோ? பலவோ? செகமுழுதும்
உய்யும் உயிர்கள் உனையெண்ணி நாளும் உளங்கனிய
எய்யும் கணைபோல் எழில்விழி யாயென் இதயமதில்
பெய்யும் கருணை பொலிந்திடும் ஆனந்தப் பேரலையே 49

அலைபடும் என்மனம் ஆடிக்காற் றாக அலைக்கழிப்ப
உலைபடு தீயென ஓங்கிய காமம் உளந்திரிப்ப
வலைபடு மீனென வஞ்சத்தில் நெஞ்சம் வதைபடாமல்
நிலைபடும் நாளெது? நெஞ்சகந் தன்னில் நடம்புரிந்தே 50

நடம்புரி நாயகி நல்வினை காட்டி நலந்தருவாய்
இடம்புரி பாகத்தாய் ஈசனின் நெஞ்சில் இனிதமர்ந்து
படம்புரி நாக முறைந்த பராபரை பாரிடையே
வடம்புரித் தேரினில் வாகைகள் சூடிட வந்தவளே 51

வந்தேன் அருள்தரு வாளென்று வானவர் வாழ்த்துகின்ற
செந்தேன் இனிமையைச் சிந்தும் திருமுகம் கண்டபின்பு
நொந்தேன் எனநான் நுவல்வேனோ? மண்ணில் தமிழ்மணத்தை
எந்தனுக் கேதந்தாய் ஏந்திழை யாய்வந்தாய் எங்குலத்தே 52

எங்கட் கினியாளை எங்கும் உறைந்த இமயவளை
பொங்கும் அடியார்கள் உள்ளத் தினிதாய்ப் புகுந்தவளைத்
திங்கட் பிறைசூடித் தேடுகின் றான்எம் தினகரியைப்
பங்கமில் பாகம் இடமாகத் தந்ததைத் தான்மறந்தே 53

47 What may this wonder be? O, Lady, ever dwelling Queenliest ONE,
grant us all the best, for yours is all gold, the feet-pair; the himalaya
daughter are you, a gold creeper; flashing waist and elegant gait you show
on this heaving earth, and shine as Leader nonpareil you do!

48 Do give, won't you? would gathering servitors turn curdled as awful humans
by thine indifference? Aren't you the lovely locks rich Dame hugging all
by bounteous love? Aren't you Champak of fragrance? Even the low down
won't you grace even as you would do good to they that mind you ever??

49 Ever your acts not a few! nor too many, who could count?? By action, by deed,
the lives fostered on your count think on you and all day with ripeness to stay,
you mail the dart of your gaze of gusto through eye to love- drench the heart
to heave and swell as tidal main beating the bay!

50 Bay wave is my mind; oscillating as Aadi winds beating, blowing hither and thither;
Lust as a flame feeds on the distraught heart; as fish angled in a net
is the pining frisking jumpy heart; when would it come to be stable
without pitapat? May thoughts take position steadfast apart!

51 Part mother on the Left in full,sweet stay in Siva's breast,
danseuse doing showing his acts, granting welfare, are you
the supreme of supreme with hooded cobra nestling tame,
aboard the drawn chariot with laurels to crown thy glory!

52 Glory would grace , thinking thus, even thus, I came; saw the fair face
praised fulsome by celestial throng, spilling rich honey; how come would
I loathe or complain on what count? haven't you given all the scent of Tamil
unto me fully? O,One well Adorned, what a jewel of descent into our clan!

53 Clandestine Sweetness for us though present as omnipresence
as himmeleh! Creeping sweetly into the hearts of servitors in zeal
and diligence is She; Moon crescent adorned One searches mad
for her, forgetting that our day-maker star is but She !

மறந்தேன் மருவற்ற மாதுளம் பூநிற மேனியெண்ணித்
துறந்தேன் தொடர்கின்ற தொல்வினை நாளும் துதித்திடவே
பிறந்தேன் பிறப்பினால் எப்பேறு பெற்றேன்உன் பக்தியினால்
சிறந்தேன் உனையெண்ணிச் சிந்தனை ஒன்றாக்கிச் செல்வதற்கே 54

செல்லும் புலன்கள் சிறகிட்டுச் செல்லாமல் சேர்ந்தொளிரச்
சொல்லும் பொருளில் சுகம்தரும் சுந்தரி சோர்வகற்றி
ஒல்லும் வகைதன்னில் ஓங்கி ஒளிரச்செய் உத்தமியை
அல்லும் பகலும் அணுகப் பெறுவார் அரும்பதமே 55

அரும்பும் முறுவலும் ஆகத் தழகும் அடியவர்கள்
விரும்பித் தொழவும் விழையும் கழலும் விரைமலர்சேர்
சுரும்பு களிக்கும் சுரிகுழல் கொண்ட தளிர்க்கொடியே
கரும்பின் சுவையாய்க் கருத்தில் இனிப்பாய் கமழ்மணமே 56

மகம்காண் குடந்தை மருங்கில் மலர்ந்த மலரவளே
சுகம்தரு பத்திதான் சொல்லற் கரிதென்று சொல்லுவதோ
இகம்பெறும் பேற்றினை எங்கட் களித்தபின் இங்கினியும்
அகம்வந் துறைகின்ற ஆசைகள் வேறுண்டோ அன்பினளே 57

அன்பும் அருளும் அறனும் அளித்திங்கே அன்பரவர்
என்பும் உருக இதயம் கனிவித்தாய் இங்கினியும்
துன்புற வந்திங்கே தொல்லைகள் தந்திடும் தோல்விகளை
நன்புற மாற்றி நயந்தருள் வாயெம் நசையினளே 58

நசைகொள்வாள்; தேவிதன் நாயகன் ஊடல் நயந்தபடி
மிசைகொள்வாள்; மேதினி வந்து பொருந்திடும் மின்னிடையாள்;
திசைகொள்வாள்; தாரா சுரந்தன்னில் நாளும் திகழ்ந்திடவே
இசைகொள்வாள்; போற்றும் இனியவர் துன்பத்தை ஏற்பவளே 59

ஏற்றிய தீபம் இலங்கி ஒளிவீசும் இன்சுரத்தாள்;
ஆற்றி யெமையாண்டு கொண்டாள்; அவளை அனுதினமும்
போற்றியே வாழ்வோர் புனிதராம்;நாளுமே போழ்ந்தகழும்
கூற்றை வராமல் குறுக்கிடும் கொற்றவைக் குங்குமமே 60

54 She all stunning red of punica, pomegranate bloom for un-fallen-ness,
and in that thought I went lost, cleansed of all sequential deeds contracting
from off yore; to worship her day in day out born am I; what avail is all
my birthing except for bhakti that conjugates me with you and goes on!

55 Go the sensoria, let go,but not to wing their way in wayward zones but to glow
combined in WORD and ENS comforting within as Beauty thine; rid us
of weariness and en route help us soar above to shine forth;
O great one night and day if all near isn't that the proximal step to bud forth?

56 Budding smile slim and mien's stunning lure of beauty,
the servitors in love hail also the scent of steps of kazhal feet and locks
adorned with bee-buzzed flowers curling up in you, a tendril creeper,
cane sweet in looks, to relish in thought of finer fragrance !

57 Entrancing Kudanthai seeing Regulus in Leo with Sun on full Moon
in due timeline sees you with blossoming looks! Is bhakti so comforting
be sworn in thus! Are there aught else to come into our hearts to lust for
when you have given us all evolute , in this very birth right away, O, Love?

58 Love, Lasting grace, Leveled up caritas, granting these concomitants,
for the servitors' coils to melt in glee, you have mellowed all; O Our Desire,
come swift to defeat defeat that might beset us with woes
by thy feat henceforth, and grace us forthwith endearingly!

59 Endears She;Devi in bouderie with Lord, would exceed the mark
and limit of Part; She suits this mundane as flash of waist to strike out;
spreads forth in all airts taking them; to abide ever in Darasuram,
consents She to cancel our woes that split !

60 Lit Lamp loosens luminously exuding light in the dulcet woody grove;
where she in febrile warmth has taken us; the sacred all day praise her fame
and live in her; She is Kotravai sangune alerting, averting the Timer,
deferring his campaign on mortals by her saffron red!

குங்குமம் மேனி குழைந்து நறுஞ்சாந்தம் கூட்டியங்குத்
திங்கட் பிறையோனைக் கூடவும் கொன்றைச் சடையமர்ந்த
கங்கைத் திருமுகம் காய்ந்தூடி நிற்குமோ? காதல்மிகச்
செங்கைத் தலம்பற்றிச் சேர்ந்தொன்றாய்க் கூடுமோ? செப்புவையே 61

வையம் அளந்தவ னைவானச் செந்தூர மேனியனை
பைய அணைத்த படிவிடை மேல்வந்து பாருலகில்
உய்யும் வழி தேடும் உத்தமர்க் கன்பை உவந்தளிக்கச்
செய்யும் செயல்கள்தாம் சொல்லும் தகையதோ செஞ்சடையே 62

சடையான் திருநீ றதனில் விளையாடும் சண்முகனை
விடையான் கனிபெற்ற வேழ முகத்து விநாயகனை
உடையான் அடியவ ருள்ளத் துறையும் உமையவளைக்
கடையேன்நான் அன்புக் கடிமையான் கண்டு களிப்பதுவே 63

களிப்பதும் பக்தி கலப்பதும் காட்டும் கருணைதனை
அளிப்பதும் என்றும் அகலா திருப்பதும் அன்பறாமல்
விளிப்பதும் நின்பேர் விளம்பிட நாளும் விரைந்துவந்து
தளிர்ப்பதும் நெஞ்சில் தழைப்பதும் தாரா சுரத்தவளே 64

தவம்செய்த தையலே தாரா சுரம்வந்த நாயகியே
சிவம்செய்த ஆட்டத்தில் சேர்ந்தும் தனித்தும் செகத்தொளிர்ந்து
பவம்செய்த இந்தப் பிறவிக் கரையேற்றும் பால்மொழியாய்
அவம்செய் பவர்க்கும் அருட்காட்சி தந்தாய் அணியிழையே 65

அணிமின் அருள்தரும் அன்னையின் அன்பாம் அணிகலனை;
பணிமின்; பொருளாம் பராபரை தன்னை; பதம்தனையே
துணிமின் துவளாத் துயரிருள் நீக்கும் துடியிடையைக்
கணிமின் கனங்குழை காரிகை ஆற்றும் கடமையையே 66

மைகொண்ட கண்ணினாய் மாமலர்க் கொன்றைத்தார் மார்பினன்மேல்
மெய்கொண்ட பாகத்தாய் மேவிடும் தாரா சுரமுறைந்தாய்
கைகொண்டு நல்அப யம்தந்து நெஞ்சில் கலந்துறைந்து
பொய்கொண்டு வாழ்ந்ததைப் போக்கப் புவிதன்னில் பூத்தவளே 67

61 Red mien coated with fragrant sandal paste and unguents to be in connubium
with moon crescent wearer fairer than fair; would the face of ganga dry up
in pale grey at this half a game of sorts? Or would she flow forth in exceeding
love in spate to jog hand in hand and fall? Reveal to the guessing world!

62 Worlds enveloping Red complex Betelgeuse sanguine in Form you have gently
caught hold of and astraddle upon the Taurus mount you have deigned
to show up and serve love to the deserving greats; such acts in what words
may come retold suiting no abridgement, O, ONE meant with ruddy locks?

63 Locks matted are his, whose fair holy ash Shanmukha dabbles in;
Vinayaka triumphant bagged the fruit from the Taurus Rider; both are hers
who abides in they that cling to her fair feet; the least of all am I, a vassal
in love and fealty to her to I hold to score a spell of delight!

64 Delighted I wed in Bhakti, even as I do, shows her mercy she and stays
inseparable from me; and I for my part in ceaseless love poised invoke her
and chant her name oft everyday for which in turn does she shoot my heart
and flourish therein as Darasuram's Tapas!

65 Tapaswini in askesis there in Darasuram for ever becoming, you in the Dancer
Lord's dance join and part with , and glow unique in this cosmos; to shore up
all from birthing bog; you indeed are milk-sweet WORD; even to the indulgent,
you have shown grace without reserve, O well Adorned!

66 Adorned let us be with Mother's love ornate;submit let us
to her supreme Sivai; submit we shall to her steps stepwise;
discern let us her tiny tabor like waist and duty bound shall we
verse plaintive numbers for her ear aglow with auric kuzhai to hear!

67 Hear don't you O, collyrium lined Eye! Upon the chest garlanded with cassia
lace you have your share of miem; you abide in Darasuram prevailing everywhere;
with your hand signing 'fear not', mixing with heart of ours, to rid us
of a life laid up in lies, haven't you blown on this Earth flower?

பூவில் உறைந்த புகழ்மங்கை யர்போற்றும் பொற்கொடியைக்
காவில் உறைந்து கடுந்தவம் செய்தநற் காரிகையை
நாவில் உறைந்து நனிமொழி பாட நயந்தருளிக்
கோவில் உறைந்து கொடுந்தீ வினைகளைக் கொய்தவளே 68

கொய்தற் குரியன குற்றங்கள் கொள்கையால் நாளுமுனை
நெய்தற் குரியன நல்லருள் பாடல்கள்; நேயமுடன்
செய்தற் குரியன செப்பும் அறங்கள்; செகமதில்நான்
உய்தற் குரிய ஒருவழி சொல்வாய் உமையவளே 69

உமையே தினமும் உனையே நினைக்க உலகதனில்
எமையே நடத்துமுன் நாடகம் என்னே! இலங்கிழைநீ
நமையே இனிதாய் நயந்தருள் நாயகி நாளுமுனை
இமையே திறந்துன் எழில்நலம் கண்டிட இன்புறுமே 70

இன்றும் எனக்குத் துணையாய் இருந்தென் இதயமதை
என்றும் நலமாய் இருக்கவும் செய்திட்டாய்; ஏழையேனை
பொன்றாத் துணையாய்ப் பொருந்தி யிருக்கும் பெரியவளே
நன்றும் நளியிருள் தீமையும் ஒன்றெனக் காட்டினையே 71

காட்டிய அன்புக் கரங்கள் அளிக்கும் கருணையினைப்
பாட்டினில் தேக்கிப் பணிந்துனைப் போற்றினேன்; பாதமலர்
நாட்டிய இத்தலம் நண்ணிட வந்தவள், நாவினிக்க
ஊட்டிய நற்றமிழ் ஓங்கிடச் செய்தநல் உத்தமியே 72

உத்தமி உன்னை உருகும் உளத்துடன் ஒண்பதத்தை
நித்தமும் போற்றினேன் நெஞ்சினில் ஓங்கிய நேயமுடன்
பித்தமே கொண்டு பிதற்றுமிப் பேதைக்குப் பேறளித்து
முத்தி தருவாய் முகில்சூழ் சுரம்வந்த மோகினியே 73

மோகம் தவிர்க்க முனையும் போதெல்லாம் முந்துநிற்கும்
வேகமும் கொண்டுன் விரைகழல் பற்றினேன் வேணிப்பிரான்
ஆகமும் பாகமாய்ப் பெற்றயென் அன்னையே ஆண்டருளும்
தாகத்தால் நான்உன்னைக் கேட்டேன் அருட்காட்சி தாவெனவே 74

68 Flower borne fabled dames hailing gold liana creeper are you;
you do fiery Tapas in the thick woods to gain your half due; may you
come upon the tongue we cultivate to word your word full well and grace;
won't you weed out our fell deeds from the yon temple you dwell in?

69 In for culling and plucking out are fell crimes; on thesis, good graceful
songs weave your majesty; all virtuous acts are meant to be done
with concern proper; please do tell me the way to survive
the mundane mishmash of life, O, Uma!

70 O, Uma, to think of you all day all through what play you play
on this mundane theater? O, Well bejeweled Lady, may you grace
with agape on thy part! Won't you promise that bliss of seeing you
eye to eye eyes all sip the elegance thine and enjoy now?

71 Now you with me escorting heartened me and made me feel well
as destined by thy will, me, even me so poor; O, mighty one greatly
supporting without let, you have divulged that the total good and the pitch
pitch dark of evil in sum are but the same rightly seen and shown!

72 Showing extended arms of love poring mercy, I caught in the chalice
of verse-vessel and praised thee in all submission daily; your foot-flower
that falls here as foot-fall as I besought to reach close, didn't you feed
goodly Tamil into my mouth savoring my tongue in soaring sublime!

73 Sublime Uma, eternally I sang your lustrous feet with melting heart;
with up-soaring known knowledge within, seized by madness sheer
I did prate; grant me the base agnostic the weal of a dose needed
to attain Mukthi O, Ravisher Dame come to the cloudy Suram woods!

74 Woods of delusion whenever I longed to clear, I hastened in saving urge
and clasped tight your fragrant kazhal feet; O, my Mother, Part of Lord's mien
wearing mandakini, may you take me in your reign's care! All athirst
I implore you, grant me graceful darshan thine, tarrying not, grant!

தாவென்றே கேட்கத் தயங்காமல் தந்தாய் தளிர்கருணை
வாவென்றே சொல்லி மனமொன்றே எண்ணி மயங்கிநின்று
காவென்றே இங்குக் கரைந்து குவித்த கரங்களுடன்
நாவொன்றே பாடநற் காட்சி அருளிய நற்றவளே 75

நற்றவ நாயகி நாளும் உனையெண்ணி நற்றலத்தில்
பற்று வைப்போருக்குப் பலன்தரும் பார்வதி; பக்தியுடன்
உற்றவர் மற்றவர் ஓங்கிடக் கற்றவர் ஓதியுனை
சுற்றிவந் திங்கே தொழவும் பெறுவரே தேசொளியே 76

தோசொளி வீசும் திருமுக மும்,செம்மை யாய்மின்னிடும்
காசொளி வீசும் கனகமென் மார்பும் கவின்முடியும்
கூசொளி யாகிக் குவலயம் தன்னில் கொலுவிருந்து
வீசொளியாகி விரிந்திடும் உள்ளம் விழித்தெழவே 77

விழித்தேன் உன்னையே விளித்தேன் வினையேன் வெறுமைதனில்
கழித்தேன்; பொழுதைக் கழித்தநாள் எல்லாம் கயமைதனில்
அழித்தேன்; அகன்றேன்; அடியேனை ஆட்கொண் டகத்தினிக்க
மொழித்தே னெனவந்து முன்னின்று நீக்குவாய் மோகத்தையே 78

கத்திக் கதறிக் ககனம் அதிரக் குரலெழுப்பிப்
புத்தித் தடுமாறிப் போனாலும் நீயே புகலிடமாய்
நித்தமும் சந்நிதி தன்னில் நினையே நினைத்திடுமென்
பித்தம் தெளியவே பேதையை ஆட்கொண்டாய் பார்வையிலே 79

பார்வையில் கட்டுண்டேன் பாசப் பிணைப்பில் பணிந்துனையான்
ஆர்வமாய்த் தேவி அழைக்கின்றேன்; அணைந்தபடி
சார்வது மன்றித் தேர்வது வேறுண்டோ? சாந்துணையும்
நேர்வது எத்துன்பம்? நீக்குவாய் அத்துன்பம் நேயவளே 80

நேயக் கரத்தை நீட்டி அழைக்கும் நிமலையுனை
ஆய கலைகள் அனைத்தும் அறிந்தியான் ஆய்வதற்குத்
தூய மனத்தால் தொழுகின்றேன் நாளும் தொடர்வதென்ன
மாயமோ? உன்பால் மயக்கமோ கூறுவாய் மாமலரே 81

75 'Grant', ere I complete the syllable, grant you did, delaying not, the tender shoot
of compassion; beckoning, with a word,focusing mind on, tended me dizzied
crying to be saved in a cawing note of alarm with folded arms and my tongue
lisped to lullaby in love; pat you showed up good, you Tapaswini!

76 Tapas born Tapas bred Tapaswin! All day I thought over you in this kshetra
where the loving devout are blessed by thee Parvathi! With bhakti
the flock, the alien, and the learned lot and all chant and surround
the shrine and secure the right to the light of effulgence!

77 Effulgent beams beam forth from thy fair face; the golden breasts dazzle
with pendant dollars in tender kindness; the fair locks out - bedazzle
all in this twirling Earth and you stay on sacred show nine-fold
disguised to overthrow light on minds to broaden and wake to rise!

78 Wake and rise up and on I did; in vocative strain I called you;for I wasted life
in vacuous deeds vain; ill spent days dumped me in low down lust; killed all good;
threw me far from you; so, come to my front in honey word- form
to take me and treat the embittered me tearing delusion!

79 Cried, lamented;roared down the sky tearing the blue;
intellect quaked; yet you are my refuge; daily before
your precincts I thought but you; you, I thought;
for my gall to cure simply did you take me, didn't you!

80 Didn't I get bound in seizure of your glance? In passion bond, I felt
shackled in all urgency; I call you Devi as an infant nearly crying for explanation
of this privilege. What choice else is left for but to bank on your mercy!
What woe then plague the weakling me! If plagued won't you
save me dear? by a stealing glance!

81 Glancing arm of help you extend and invite me; me,for my part which is but your will,
incline to learn all arts and pray for further, questing with heart pure; and prolongs
this craving mine day after day; what may this be, a lie of a mystery
or madness for thy grace? Tell me, O, flower of flowers!

மலரும் முகமே மரையாகக் கண்கள் குவளையென
மலரும் இதழ்கள் பவளமாய்; நாசிஎட் பூவெனவே
மலரும் நறுமுல்லை மென்புன் னகையாய் மிளிர்ந்திடும்
மலரும் மணமாய் மணங்கமழ் பூங்காடாம் மாண்பொளியே 82

ஒளித்திரு மேனி உமையொரு பாகன் உனைத்தழுவிக்
களித்திடும் நெஞ்சம் கனிவாய் மகிழ்ந்தான்; கருணையினால்
துளித்திடும் பக்தியைத் தொடர்ந்து வணங்கத் துடியிடையாள்
அளித்திடும் கல்வி அகலாதென் உள்ளத் தரும்பிடுமே 83

அரும்பில் சிரிக்கும் அழகினைக் கண்டேன்; அகங்குழைந்து
சுரும்பு களிக்கும் சுரிகுழல் கொண்ட சுரத்தவளாம்
கரும்பாய் இனிக்கும் கருணைக் கொடைதரு கற்பகமே
துரும்பிற் சிறியேன் துணையென வந்திடும் தண்மதியே 84

தண்மணி வட்டத் தளிரொளி தானும் தரையெழும்பக்
கண்மணிப் பார்வையில் கங்குல் சுழன்றே இருளகல
விண்மணித் தாரகை வீசிடச் சென்னியில் மின்னலிடப்
பெண்மணி ஆகிய பேரொளி யைக்காணும் நாளிதுவே 85

நாளென ஒன்றுபோல் காட்டும் நயமிகு நாடகத்தில்
வாளென மின்னி மறைந்திடும் கானலாய் வாழ்வுதனில்
ஆளென வந்திங்கே அற்புத வேடத்தில் ஆட்டமிட்டேன்
மீளெனச் சொல்லி விரைந்து வருவாய் விடையமர்ந்தே 86

விடையே றியபெம்மா னோடு விளையாடும் வித்தகியே
தடையே வருசெயல் தன்னைத் தடுக்கும் தயாபரையே
கடையே விழியசை யாவோர் தவந்தனைக் காப்பவளே
இடையே இலாநடை யேற்கும் மலைமகள் மெய்யறிவே 87

மெய்வகை ஒன்றையும் மேவாமல் நின்தொண்டு செய்யவேநான்
எவ்வகை இன்றும் எளியேன் அறிகிலேன் ஈங்கெனக்கே
உய்வகை நீயன்றி ஓங்கும் உயர்வகை ஒன்றிலாமல்
பொய்வகை காட்டிடும் போலி மனிதர்பின் போனதுவே 88

82 Flower Face is Lotus full blown;eyes are nenuphar blooms of albae;
wooing lips are coral wet; nose shames sesame bud, aquiline; smile small
is jasmine slip; O,Creeper of glowing lustre nestling within
the arbor of heart,O,silent scent of floral spray!

83 Spray of light is thy fair mien; he with Uma in part embraces
to his fill and joys in union cordial soft; by thy Mercy bhakti burgeons;
I bow following the wasp waist woman in you saturating me
with learning never to wane but wax and sprout all the more!

84 More of the fair smile sprout I saw; with mellowed heart there but is She
with curly locks bee hovered, in front from Suram town, sure;
O, Kalpaka grove spilling compassion, profuse gift! Me, dust of rust
tiny nothing, to escort even me,you have come as cool Moon!

85 Cool perilune fair, tendril of light, on its own in ascension from the gawky line of sky!
The twirl of dark leaves and murk dissolves in inner halo;
starry cerulean beams throw;flashes diadem the crest; proper is this day
to gaze the feminine glory of gorgeous glow !

86 Glow to gloss the day it shows as if! In this nicety dramatic,
life like flashing sword is to swish and fade ; a mirage I hold for stage
to play fancy roles of razzmatazz; wont you exhort, alarm me,
'retreat quick', 'bid adieu to vice', and speed to grace?

87 Gracious, aboard the Taurus is Lord; with him you play a champion round;
you bar all obstacles that impede en route in full condoning!
Aren't you the Saver of Tapas with eye set firm unto the last! Veritable gnosis
sticks to Style and Faith with fissure none, of Mountain daughter's in troth!

88 In troth am I steadfast to serve you in obeisance absolute; still till date
I know not why , by what means, I am brought thus to forward, me so simplistic!
My means are you none but you;No way out to soar,
have I been waylaid and led by mock-human clock-work, woe begone?

போவதும் இப்புவி மீள்வதும் போக்கு வரவெனவே
ஆவதும் பின்னர் அழிவது மான அரங்கதனில்
சாவதும் மண்ணில் தவிர்வதும் உண்டே; தளிர்பதத்தால்
பூவது மேவும் மெல்லடிப் பொருந்தப் புலருவதே 89

புலரும் பொழுதும்உன் புன்னகை பூக்கின்ற பொன்முகமும்
மலருமென் வாழ்வின் மயக்கத்தை மாற்றும் மலரிதழும்
அலரென் றொளிர்ந் தபயம் அளிக்கும் அணிகரமும்
உலர்ந்தென் உடல்தான் தளரினும் நெஞ்சத்தில் ஒன்றிடுமே 90

ஒன்றே பலகால் நினைத்தேன் உனையே; உவந்தபடி
நன்றே தவம்செய்தேன் நாயகி ஐம்புல நாட்டமதில்
சென்றே திரியும் செயலினை மாற்றிச் செகத்தொளிர
அன்றே தடுத்தெனை ஆண்டுகொண் டாய்;அரு ளாம்பிகையே 91

அம்மையே வாழும் அனைத்துயி ரைஅன்பால் அரவணைப்பாய்
மும்மை உலகத்தின் மூலப் பொருளாய் விளங்கியிந்த
இம்மைப் பிறவியில் இறையின்பம் மாறாமல் இங்கெனக்குச்
செம்மையாய் வாழத் துணையாக வந்தாய் அனையவளே 92

அனைத்தும் அறிந்தவள் அண்டம் அளந்தவள் ஆட்டுவிக்கும்
மனத்தின் பிடிதன்னில் மாண்புடன் மாறாமல் வீற்றிருக்க
நினைத்தே அவளை நெருங்கித் தொழுகின்றேன்; நெஞ்சமதில்
சினத்தை அடக்கிச் செருக்கைத் தவிர்ப்பாய் செகந்தனிலே 93

தனியே கிடந்து தவிக்கும் மனத்தைத் தடுத்தெனைநீ
இனிதே அருகில் இனிமை கொளவென் இடரொழித்துக்
கனிவாய் இருந்து களிப்புறச் செய்வாய்; கனல்மழுவன்
பனியே தருபிறை சூடிய பரமன் பங்கினளே 94

பங்க மிலாதுநின் பாதம் பணிவார் பயன்பெறவே
தங்கி உறைந்திங்குத் தாரா சுரத்தலம் சார்ந்தவளைச்
சங்கரி என்றும் சடாதரி என்றும் தொழுபவரைப்
பொங்கும் அருளால் புகுவள் அவருளம் பால்மொழியே 95

89 Gone and come, on Earth in repeat try we sense the sordid transport;
to become and turn bygone happen on the stadium where but to die
athwart might be to rise redeemed! With thy tender step more tender
than a flower divine dawn in due time advents to bloom!

90 Booming time of dawn! Smile flowering golden face! Pat my life cloudy
clears to view; and in my heart fused are the calyxes that convert
delusion to clarity, and the ringed digits in open palm of lustrous sanction,
even if my frame frail shrivels up in dolorous thought!

91 Thought I several rounds the same One, relishing you, but you, you only;
Tapas I did as ordained by Will; O goddess, you took me that day verily
altering me by an alchemy, preventing proneness to wag bedraggled
by wand of senses five to swine low in the bog of birth, O, Ambika generous!

92 Generous Mother, don't you gather all beings on this mundane sphere
with couching care? The source Ens for all triple words , aren't you?
Come haven't you as my comrade for a chaste life lofty
here with the divine feel never wanting once and for all?

93 All you know; orbs your measures are; when mind is boggled by lot,
saving it from splits, I tend to near her and worship her;
may she check my anger and pride that surprise to wreak havoc
and may she safeguard me from their deadly attack in this vast world!

94 World-shy all alone pines my heart; but you timely intervene
and excuse me sweetly to sense more sweet, sacking all
straddling things, being kind to the core, delighting me! O,Uma in Part
of the snow-silver crescent wearing Lord sporting mazhu on his palm!

95 Palm-fruit is got by they that supplicate themselves unto the feet without flaws;
for them you abide and stay put in Darasuram; Sankari, Jadadari,
all are you. Thus, even thus if they worship you enter them forthwith
with grace welling for their hearts' milk sweet beats of WORD!

பால்போலும் நெஞ்சில் பதிந்தது பைந்தமிழ்; பாயுமொரு
வேல்போலும் கூர்விழி வென்றது வெம்பகை; தோற்றமொரு
நூல்போலும் நுண்ணிடை பெற்றது நற்பாகம்; ஓங்கியுயர்
ஆல்போலும் தண்ணிழல் ஈந்தது நல்லருள் மேலவளே 96

மேவும் தலம்வந்த மங்கலை ஐரா வதனொடுநீ
பாவும் இழையுமாய்ப் பாங்காய் இருந்து பயனுறவே
கூவும் குயிலாய்நற் கோல மயிலாய்க் குலவிடவே
தேவியே தாரா சுரத்தலம் வந்தாயோ தண்ணளியே 97

தண்டலை மேவித் தழைக்கின்ற தாரா சுரத்தவளை
விண்ணவர் தேவர் விரும்பிப் பதந்தொழ வான்கருணை
கொண்டலை மேகங்கள் கொட்டு முழக்காய் ஒலியெழுப்பக்
கண்டலைந் திங்கே கவிவெறி மூலமே காணுதற்கே 98

காசையே எண்ணிக் கசடனாய் மண்ணில் கழித்தநாளை
வேசமே பூண்டு வெளிச்சத்தில் விட்டிலாய் வீழ்ந்தநாளைப்
பூசையே செய்திங்குப் போக்கினேன் நின்தாள் பொருந்திடவே
ஆசைமேல் ஆசைவைத் திங்கே அடைகின்றேன் ஆனந்தமே 99

ஆனந்த மாகவென் ஆகத்தில் வந்தமர் நாயகியே
வானந்தம் ஆகி வலிமையால் ஆளுகின்ற வானிதியே
தேனமு தாய்ஞானம் தந்த தெவிட்டாத தெள்ளமுதே
தானந்த மாகித் தலம்வந் தமர்ந்திடும் திருவுடையே. 100

96 Word of Tamil luscious is ensconced in my heart; the charging spear eye
of hers has quelled all fell foes; scarce showing thread thin waist of hers
secured a part due to play; and grace benign of the sublime she
sent a silent streak of light from the ficus soaring up!

97 Up on this sacred site have shown you auspiciously; with Airavataeswar
you are warped and woven in love, meet to grant fruit; as koel calling,
peacock strutting fair, conjugating as Devi in Dárasuram ,
with all coolth of gift, haven't you deigned to come?

98 Welcome fan-tailed blue crested ocelli rich Darasuram is She;
the head of celestial deities willingly worshiped her Feet; the Mercy sky
gathered clouds rain-bearing to rumble and honor her; seeing which
poetic afflatus would frenzy forth to blazing show!

99 Shown and seen as flux of dregs bent on money was I to spend time in the drift of life;
cloaked in just form yet a glow worm to lured to lumination and perish was I?
For all such in time of yore, I dedicate days now in worship;devoted to your Feet,
with love bred love I do reach unto the here and now of Bliss!

100 Bliss abiding in my mien as Devi are you;O, Azure Main of the skies
with the entelechy empyrean there reigning with power supreme are you;
O, Insatiable ambrosia of gnosis pellucid as honey melic; O Fair Form
come to stay put in Suram as the Ultimate for me O, goddess Weal!



# திருவேற்காடு கருமாரி அந்தாதி

விநாயகர் காப்பு

மொழியவோர் முன்னைப் பொருளானைப் பற்றித்
தொழிலினிது முற்றத் தொழுதேன் எழில்விழியால்
காக்கும் திறத்துக் கருமாரி நற்புகழைப்
பாக்களால் தந்தேன் பணிந்து.

★★★

அன்னை கருமாரி ஆளும் அவனியில் அல்லலெல்லாம்
முன்னைத் தொடர்ந்திடும் மூள்வினை முற்றும் முடிவுறவும்
பின்னை வருகின்ற பேரிடர் நீங்கவும் பேரொளியால்
தன்னைத் தொழுவார் துயர்தீர நன்மை தருபவளே 1

தருகுவள் நல்வரம்; தண்டமிழ்ப் பாவைத் தளிர்கரத்தால்
பெருகிடும் பேற்றினைப் பெற்றிடச் செய்குவாள்; பேரருளால்
அருகிடும் தீமை அகல அருளுவாய்; அண்டமதை
வெருவிடும் வல்வினை மாற்றிட வந்தனள் வேல்விழியே! 2

வேற்காடு மேவும் விமலை வினையினை வேரறுக்க
நோற்கா திருப்பதோ? நோய்தனில் நொந்து நுவல்வதோ?நான்
ஏற்கா திருப்பதோ? ஏற்றம் தருகின்ற ஏந்திழையை
நாற்கா தமோடி நவிலவும் வேண்டுவதுன் ஞானமதே! 3

ஞானமே; நாளுமே ஞாலம் வணங்கிடும் நற்புகழின்
கானமே; கற்பகச் செல்வியே காடுறை காரணியே
கூனமே மேவும் குறைமதி சென்னிமேற் கொண்டுலாவும்
மோனமே; முக்கட் பகவதி மூவிலை கொண்டவளே! 4

# TIRUVERKAADU KARUMAARI ANTHAADI

### Invocation

### Prayer to Lord Vinayaka

Primordial Vinayaka, I praise
in worship; save us Mercy - Eyes
of Karumari, Grace of her
I offer in humble verse.

★★★

1 Mother Karumaari maintains Earth; woes, prior deeds
over-lugged, and sad sequels of disasters in trail
come to naught; by effulgence she confers good
on worshipers in want, waiving their grief.

2 Give She would goodly boon; by her tender arm
splash cool Tamil verse in spate; by grace immense
avert the evil on the marge and alter the foul
into fair, O, the Spear-eyed One!

3 One Flawless prevailing in Verkaadu uprooting deed,
Am to observe austerities or wallow wilting to prate
or obey the incines of worship mode or run headlong
full square cable and crave for gnosis from you?

4 You are the psalm of glory the fourfold world hails
as gnosis ; kalpaka's opulence are you; also, the causal ens
indwelling woods; isn't the wan crescent on crest
by thy silence cured? O, Bagavathi triple eyed,with trident!

மூவிலை கொண்டிங்கு மூல முதல்வியாம் மோகினியை
நாவினால் போற்றிட நாற்றிசை எங்கும் நலமளிப்பாள்;
பூவிலே வந்து பொருந்திடும் வண்டெனப் போந்துமலர்க்
காவிலே தங்கிக் களிப்புறச் செய்யும் கருமாரியே! 5

கருமாரித் தாயே; கருநிறக் காரிகை காத்தருளும்
கருநீலி; மேவும் கடுவினை தீர்க்கும் கனிமொழியே;
கருவிழி தன்னில் கருணை சுரந்திடும் கற்பகமே;
கருத்தாய் இனித்தென் கணவிருள் நீக்கிடும் காலமிதே! 6

தேடிவந் தேன்;தேவி வேம்பின்கீழ் வீற்றிடும் தேசொளியைப்
பாடிவந் தேன்;பத்திப் பொங்கிடப் பூரணி பொற்கழலை
நாடிவந் தேன்நற் றமிழால் பரவி நலம்பெறவும்
ஓடிவந் தேனவள் ஓங்கு புகழினை ஓதிடவே! 7

ஓதி யுணர்தற் குரியாளை ஓமெனும் ஓங்காரியை
ஓதி யடியேன் உயர்ந்திட உன்மத்தம் ஓங்கிடவும்
வீதி தனில்யான் வெறிகொண்டு பாடினேன்; வெற்றிதரும்
ஆதி முதல்வி அருள அகலும்அஞ் ஞானமதே! 8

ஞாயிறு வந்து ஞமலையைப் போற்றிட ஞாலமதில்
பாயிருள் நீங்கும்; பராபரை பேர்சொலப் பாரதனில்
ஆயிரம் நன்மை அடைந்திடச் செய்யும்; அனற்பிழம்பாய்த்
தீயிடை நின்று திசைகளை ஆளும் திரிபுரையே! 9

புரையே;புவியே; புலன்நாவால் போற்றிப் புகழுதற்கோர்
உரையே; உரையதன் உட்பொரு ளாகி உணருதற்கோர்
பரையே; பரிதியாய்ப் பாங்கொளி வீசிப் படர்ந்தொளிரும்
வரையே; இனிதாக வேற்கா டுறைந்திட்ட ஈருருவே! 10

ஈருருக் கொண்டிங் கிலங்கிட ஈசானத் திக்கமர்ந்த
காருரு மேனியாய்; கண்கண்ட தெய்வமே; கற்பகமே;
தேருரு ளையி னடிதனில் சிக்கித் தவிப்பதுவாய்ப்
பாருல கின்பிணி காண இதயம் பதைப்பதுவே! 11

5 Tri-pinnate neem leaves I offer to the Foremost Goddess
of Charm you are; my tongue praises in reflex; directions
four are blessed; bee lands in the blossom; so drunk
is my cheer in floral grove of Karumaari!

6 Karumaari Mother Earth! Dark hued Dame saving all with blue
nenuphar eye! Succulent fruity speech that chases away
the accursed deeds! Mercy oozing black pupils! Kalpaka tree!
Time it is to dispel the night in my sweetly conceived search!

7 Searching come I; abide you 'neath the Neem as Vaikari light
I lyric in awe; welling Bhakti, I arrive at the perfect floral feet thine;
with Tamil chaste to secure all good I rush unto
to hail high your soaring glory and to chant!

8 Chant to be felt is She; Om form is She pranava; as I chant
I soar in orgy and saunter the streets impetuously;
the triumph yielding Beginning-less Foremost One graces;
and agnostic 'I' is shrunk to anonymity!

9 Mighty Sun ascends to hail the taalam of Sakthi;soon Dark departs;
name Paraaparai, the supreme sound fulgurant in moolaadhar
rings; the world gets myriad boons; as flame of a tongue
amid fires reigns to fan Tripurai with triple Forts in heed!

10 Hid secret womb of Earth! Word to hail by the sensory Tongue!
Sound vaikari form from the inner hermetic feel of utterance!
Steed like speed spreading a spectrum over a mountain range!
Sweetly you stay in doublet of form dwelling in Verkaadu!

11 Duo form glows! Seated therein is the prabha behind the sanctum
as dark dark mien dear to eye to eye; O, Kalpaka ! As if crushed
under car-wheel am I in this seen world of shackles
with heart in stroke of angst beating retreat!

வேலாய் விளங்கிடும் வேற்கண் ணுடையாய்; விரைந்தருளப்
பாலாய்ப் பொழியும்உன் பாசம் பகரப் பரம்பொருளை
நூலாய் விரித்து நுவல்பொரு ளாக்கிய நுண்ணிடையே
சேலே விழியாகத் தேசொளி வீசும் செகத்தினளே! 12

செங்கை பயில்வன வாளும் உடுக்கையும்; செவ்வரையன்
மங்கை பயில்வன மாயமும் மோனமும்; மால்வண்ணனின்
தங்கை பயில்வன தானமும் நற்றவச் சிந்தனையும்
அங்கை பயில்வன அற்புதம் நல்கும் அருளுருவே! 13

அற்பு வடிவுடை அந்தரி ஆனந்தப் பேரிமய
வெற்புடை மாதங்கி; வேம்பினால் தீவினை வென்றிடுவாய்;
பொற்பன் தலைவிநீ பொதிகை வந்த முனிவனுக்குக்
கற்பு மணக்கோலம் காட்டுமுன் மங்கலக் குங்குமமே! 14

குங்குமச் செல்வி குவலயம் காக்கும் குமரியளே
தங்குபுகழ் வேற்காடு தந்திடும் பத்தி தவத்தவர்க்கே;
பங்குறை மங்கை பரமன் அடிபோற்றப் பாங்குடனே
எங்கணும் நின்பெயர் கூறிட இன்பம் எழுந்திடுதே! 15

எழுவரில் நீதான் இளையவள் ஈசன் இடமமர்ந்தாய்;
வழுவிலா வாழ்க்கை வழங்கிடும் வஞ்சி; வனத்தமர்ந்து
தொழுவார் துயரங்கள் தீர்ப்பாள்; எமக்குத் துணைவருவாய்,
பழுதிலாப் பத்தியைப் பற்றிடச் செய்திடும் புற்றினளே! 16

புற்றில் உறைந்து புவியினை ஆட்கொண்ட புங்கவியுன்
நற்றிறம் பாட நயந்தோம்; தினமுனை நண்ணுவார்க்குப்
பற்றுடன் பாசமும் பாங்குடன் சேரும்; பணிபவர்க்குச்
சுற்றமாய் நின்று சுகந்தரும் வேற்காட்டுச் சுந்தரியே! 17

சுந்தர வல்லி; சுடர்ந்திடும் பேரொளி; சோதனைகள்
வந்தெமைத் தாக்கிட வல்லமை தந்திங்கு வாழ்வளிப்பாய்'
செந்திரு மேனியள் செப்பரும் நாமகள் சேர்ந்திலங்கும்
பைந்தமிழ் பெற்றநற் பாங்கினள் பார்புகழ் பைரவியே! 18

12 Treat of your spear-eye luminous as lance! May you in passion
pour tarrying not the milk of kindness to show the supreme Ens;
which is in expanse of the text made in minute middle thine
with silurus fish eye fanning light over the vast vast worlds big!

13 Big sword and tiny drum are your arms; you as part of arsenic hill
hued Lord, triple acts and silence perform; as sister to Maal blue
fare you forth with caritas and obsessive askesis; your fair arms
customize miracle breeding grace in tropes of shape!

14 Ship shape inner space! Bliss-Snowing hill, O, Maatangi!
With the leaf of Vembu you quell all evil; aren't you the lady highness
of the hill-owner! You show unto the dwarf-sage checking in tall Potiyil,
your auspicious saffron tilak of marital grace!

15 Grace rich saffron marked Kumari tackling the twirling worlds;
for the deserving you instill a relish of bhakti in Verkaadu
where stay fame's locus live; you, part Supreme Siva,
whose feet resorted to, make thy name on mention, well up joy!

16 Joy of youth is yours the youngest of the seven from parai to saras;
on Lord's left you, as liana, wave in unfailing life; abiding in fane,
you abate the worshipers' woes;and help me in time; you make us
cling to faultless Bhakti from your ant-hill hide-out!

17 Out in the ant-hill is Earth inside! You reign there all the best;
we incline to sing your unique powers; even if a little we near,
to us you confer Passion proper; as we submit to you
you as our kin comfort us, O, Beauty incarnate!

18 Beauteous Creeper, glowing Vaikari in effulgence, when challenges
challenge us, you strengthen us to brave them; ruddy Fair
and ineffable Word both show in your mien with chaste Tamil classic
in all worlds as Bhairavi in Eesaanam, the zeitgeist !

பைகொண்ட ஐந்தலைப் பாம்புக் குடையுடன் பங்கமிலா
மெய்கொண்ட நாயகன் மேனியில் வீற்றிய முக்கண்ணியள்
கைகொண்ட வேலும் கலசமும் வேம்பும் கருணையுடன்
மைகொண்ட அம்பு விழியால் அழகைப் புனைபவளே 19

புனையும் திறம்பெற்றுப் பத்தியால் நின்புகழ் பாடிடவே
நினையும் பொழுதினில் நேர்நின்று நித்தமும் நெஞ்சுருகி
வனையும் கவிதைகள் வாழ்விக்கும் எம்மை வெருவிடும்வல்
வினையும் களைந்திட வேற்கா டுறைந்த விழுப்பொருளே 20

பொருளே; புவியைப் புரக்கும் புனிதையே; பூவுலகில்
இருளே அனைய இடர்கள் அகற்றிடும் இன்னமுதே;
அருளே தரும்படி அம்மையை வாழ்த்தினேன், ஆசிபெற
மருளே பிணியாய் மயக்கும் பிறவிதான் வாட்டிடுமோ! 21

வாட்டிய வல்வினை மாற்றுவாய்; வேம்பினால் வெந்துயரை
ஓட்டியே பத்தியை ஊட்டுவாய்; வேற்கண்ணால் உன்புகழை
நாட்டியே நன்மைகள் காட்டுவாய்; நல்லதை நானிலத்தில்
கூட்டியே அன்பினால் கூடுவாய்; கொற்றவன் கண்ணுதலே! 22

கண்ணுதல் காதலி காமனும் கண்களால் காய்ந்திடவும்
ஒண்ணுதல் உன்காதல் உய்யுமோ? ஓம்சொல ஓங்கிவளர்
பெண்ணுதற் பார்வையால் நேயம் வளருமோ? பேருவகை
எண்ணுதற் கேயிங் கியலுமோ? ஏழையை ஏற்றவளே! 23

ஏகமாய் நிற்கும் இமையன் மகளே;எம் ஈசனவன்
பாகமாய் ஆன பரம்பொருளே; பத்திப் பெருகிடவே
தாகமாய் வந்து தமிழ்க்கவி பாடிடத் தண்ணளியை
ஈகையாய்க் கண்டியான் இன்புறச் செய்திட்ட பத்தினியே! 24

பத்தி அளித்துப் பரமனோ பாடிய பார்வதியே;
சத்தியே; சத்தி தழைக்கும் சிவமே;நற் சாக்கதத்தின்
வித்தே; விரிந்திடும் வையஞ் செழித்திட வந்தவளே
முத்தாய் ஒளிரும் முகிழ்நகை அன்பைப் பொழிபவளே! 25

19 Easily Five hooded venom sac of serpent canopies over
the seamless Lord's part you stay with three eyes,
lance, gold bowl and neem rod;and in mercy moist
you spin the orbs by collyrium lined eyes of compassion!

20 Passion powered in bhakti as I sing thy praise, as and when
I think of you face to face in private precincts, as my heart
melts to indite verses soft, you the Verkaadu abiding sublime Ens
shall weed out my frightening fell deeds sure!

21 O, Sure Ens Lofty! Sacred Heart nourishing Earth! Nectar sweet
fending off hazards hellish that hover upon! Would base births tease
overmuch and ditch us into ailing murk, deprive us of grace
to hail Mother and get her blessings thereof?

22 hereof, cancel all that disturbed our calm; by neem's fragrance put out
all hell fires; suckle us all with bhakti's syrup;with thy spear-eye establish
thy reign and reveal the benign core; gather the essence into existence
by love and service, O, Kotravai of Metopic eye!

23 Metopic eye of love! Would you approve Kama's finish through
eye-unleashed flames? In OM spell would the temples' eye
hot and feminine engender affinity or not? Would you permit me
the bliss of excelsior joy? O, Maiden, Excellency!

24 See, you are the unique daughter of Himavant, Part of Eesa yet supreme.
For bhakti to wax abounding, may I thirst to try the Tamil
your cool passionate present, which wrapped and warped
in prosody makes me happy, O, Lady Abstinent!

25 Abstinent Parvathi to dance with the Dancer Supreme,
bestowing a modicum of bhakti.! O, Sakthi-flourishing
Sivam and Sivai! O, Anthaakshari! You have deigned to expand worlds
O, Pearl-lustre-smiles of love pouring Princess!

பொழியும் மழையாய்ப் புவியைக் குளிர்வித்துப் பூமனத்தில்
வழியுமென் பத்தி வளரவும் நெஞ்சம் மகிழ்ந்திடவும்
மொழியும் பொருளினை மூத்த மொழியில் மொழிந்திடவும்
கழியும் பொழுது கரைந்திடும் வாழ்வு களிப்புறவே 26

களிக்கும் செயலுக்குக் காரண மாகிக் கருணையினால்
அளிக்கும் அருட்புனல் ஆழத்தை யார்தான் அளப்பதுவோ?
விளிக்கும் பெயரை விரைகழல் பூண்ட விமலையுனைத்
துளி(ர்)க்கும் உளத்தால் தொழுகிறேன் காடுறைத் தூயவளே! 27

தூமணம் நல்கிடத் துன்ப வினைகள் தொலைந்திடவோர்
காமணம் வீசிடும் காமாட்சி; உன்றன் ககனமதில்
பூமண மாகிப் பொருந்துமுன் பொற்பதம் போற்றுதற்கு
நாமணத் தால்நான் நவில்கின்றேன் நல்லன நல்குதாயே 28

தாயே தயாபரை தண்ணளி காட்டுமுன் சிவந்தமலர்
வாயிதழ்ப் புன்னகை யாலிந்த வையம் விடியுமன்றே;
நாயாய்த் திரிந்து நலிவுறும் மானுடம் நன்மையுற
ஓயேன் உனைநாளும் ஓதா திருப்பேனோ? ஓமெனவே! 29

ஓங்கார நாயகி ஒன்றா முலகத்தில் ஓங்கிநிற்கும்
ஆங்கார வேரை அகற்றி அகத்தை அணிசெயவும்
தீங்கான மாந்தர் திருந்தவும் தீமை செயலறவும்
பாங்கான வேற்காட்டில் பத்தர்கள் கூடினர் மெல்லியளே! 30

மெல்லியள்; மேதினி மேனின்ற மாலினி; வெண்ணிறநன்
மல்லிகைக் காடாய் மலர்ந்த திகம்பரி; மாண்புறவே
சொல்லில் சுடரேற்றும் சௌந்தரி; உன்றனைச் சுற்றிவரப்
புல்லிய நெஞ்சப் புலன்தூய்மை ஆகும் மினற்கொடியே! 31

மின்னலே மின்னிய வண்ணம் அணிகள் மிளிர்ந்தொளிரும்
தென்னன் மகளையான் தேர்ந்தேன் வணங்கித் தெளிவுறவே
இன்னல் அகற்ற இனிமைசூழ் வேற்கா டினிதுறைந்த
கன்னல் மொழியினள் காப்பாய் கருமாரிக் காரிகையே! 32

26 Ceaseless raining, you cool the Earth, Mother;
culture bhakti in lotus soft hearts to brim, to stain with joy,
let me word in mature tongue in sweet excess
defecting my life to total mirth!

27 Mirth seized, I act in reflex as caused by mercy and grace
which I felt so deep,- who could fathom me, the main of mine?
In all vocatives of thy name nestles a fragrance of kazhal adorned feet, Vimala!
You, I worship, adore, you, the pure secret in woods aflame!

28 Flaming scent spread in luring diffusion. the obnoxious depart;
the groves shall breeze balmy vapors, O, Kamakshi in your skies;
flower pollen stick on to your golden feet to praise; wed my tongue
to whisper the tales good, and grant profuse grace!

29 Grace-compassion rich mother, Show thy coolth of yielding nature,
thy sanguine flower-lips serving slim small smiles promising dawn
for worlds in dark sump.Cur like roaming woe-struck humanity to gather grace,
crave,let me; Did I ever stop chanting you in refrain breaths of OM?

30 OM in womanhood superior. As a point in moolaadhaar, rising up and up,
uprooting 'I', cleaning the inner decor, chastening the wrong, channeling them
aright, dumping evil waste, deactivating the devilry in them, in
Verkaadu resort, devout gather, O sweet Soft Maid!

31 O, Softie Malini astraddle upon Earth, clad in white jasminum
wood-in-spray, comely One in airts' wear! Honoring word
in the white heat of meaning, ravishing diction you are! Circling you,
my lazy heart would be rid of slug,O,climber-creeper in a flash!

32 Flash! Adornments gleam! I know you are the daughter
of Southeron Pantya King. Bowing I go clarified,rid of my puniness;
turn sweet circumference; may you Verkaadu dweller of sugarcane
sweet speech, save and deliver me, O, Karumaari, the Five Acter, O!

காவண்ண மேயெம் கவுமாரித் தாயே! கனியமுதப்
பாவண்ண மேபலர் போற்றும் கருணைப் பெருவெள்ளமே;
பூவண்ண மாகிப் புகழொளி சேரப் புவியிலுளார்
நாவண்ண மேந்திட வந்து நலஞ்செயும் நல்லணங்கே! 33

நல்லணங் கேமேவும் நாமகள் பூமகள் நாடிவந்து
வல்லணங் கானவள் வாழ்த்தி வணங்க வரமளிப்பாள்
சொல்லணங் கான சுடரொளி; வேற்காட் டகத்துலவும்
வில்லணங் கேயுன் மனத்தில் குடிபுகும் வேட்கையதே! 34

கையது வேலே; கருணை உவப்பே; கணிச்சடையன்
மெய்யதுன் பங்கே; மிளிர்வதுன் மேனி; மருட்டுமிந்தப்
பொய்யது வாழ்வே; பொருந்தும் பதமே; புலருமுளச்
செய்யது நாளும் சிறப்பாய்ச் செழிக்கச்செய் சேயிழையே! 35

இழையும் விழைவால் எலுமிச்சை மாலை இனிதணியக்
குழையும் மனமும் குளிரும் உனது குவலயத்தில்
மழையும் பொழியும் மகிழ்ச்சியும் ஓங்கிடும் மண்ணதனில்
பிழையும் அகலும்நின் பேர்சொல வேம்பால் பிணிப்பவளே 36

பிணித்த இதயத்தைப் பத்தியில் மீட்டிப் பேதையெனைப்
பணித்தாய்; நின்னடிப் பொருந்தத் தினமும்இப் பாமரனைக்
கணித்தாய்; அருளில் கலக்கநல் லன்பில் கரைந்திடயென்
அணித்தமாய் வந்தாயோ! ஆழிசூழ் அண்டத்தின் அம்பிகையே 37

அம்பை அதிர அகங்கை அழல்காட்ட ஆடலுடன்
பம்பை முழங்கப் படமுடன் நாகந்தான் பைவிரிப்பக்
கும்பக் கொடியுடன் கையில் கலசமும் கொண்டுலவும்
செம்பை நிகர்த்திடும் சீரடி பாடினேன் தேவியளே 38

தேவியே; நின்னையாம் தேடிச் சரணடைந்தோம் ஈங்கெமக்(கு)
ஆவியே போல்வாய்; அகிலம் வலம்வந்தாய் ஆசிமலர்கள்
தூவியே வாழ்த்தினோம் தோடணி மெல்லியள் சேவடியை
மேவியே வந்தோம்நல் வேற்காடு வீற்றும் விழுப்பொருளே! 39

33 Olive virescent verdure! O,our Karumaari Mother!
Fruity ambrosial poesy's jade! Many extol you, Compassion-flood,
glaucous florescence, beaming fame, burgeoning Earth's turfy sward,
thought's valiance! Come, deign to grace,o, goodly Uma!

34 Woman benign: the prevailing Dame Tongue, Dame Lotus came on their own
endearing you; you grant boons and pluses even as they hailed. Aren't you
word-in-Uma-form aflame wandering in Verkaadu woodland wild? With your bow,
as you stride, I thirst to be hunted in the will of thy estate!

35 State meant to meae: your arm wields a spear; Mercy is your cheer;
He of matted locks in mien is your part; flame Love is your frame;
this Life-Lie function threatens; but my concord is your step; my heart-flower
be paced soft; nightly, tread upon to bloom oft, O, bejeweled One!

36 One wish: Lace your neck with mellow Lemon Osbeck fruit garland,
seeing which bosoms heave, stiffen and soften; cools oblong heart; in your
circle,rains lash;happiness swells; flaws flushed out; as thy name
is voiced bound are we in the rustle sound-cloud of neem mesh!

37 Enmeshed, heart you strum; have ordained me to submit;
me, ignorant of how to fix on thy feet, you have reckoned
and checked in to merge in grace,break down in love.
So nubile in closeness? O, Ambika of Orbs girt with oceans!

38 Ocean like waters swell; inner palm lolls the flame-tongues; pambai and tabor
by thy dance, beat,tap and muffle; hooded cobra opens venom- sac; arm holds
a standard bearing the pitcher sign; another sports one of gold;
paling copper your cerise feet rove, I praise you Devi!

39 Devi! I search for you and surrender; hither you are our spirit; you have
cliques through realms many; we shower flowers and pray you; you wear todu,
a stud on your ear; your crimson feet we woo and come; O, Verkaadu abiding
ultra ne plus ens! aren't you moved!

பொருள தகற்றுவாய்; போகம் அகற்றுவாய்; போந்தலையும்
இருள்சூழ் உலகில் இனியும் இடர்ப்படேன்; என்றுமினி
அருள்தரும் உன்னையே அன்னையாய்க் கொண்டபின் அன்பருளும்
பெருமை மிகுதிரு வேற்காட்டால் பண்பட்டேன் பாலமுதே! 40

பாலமு தாகப் பரவிப் பெருகிடும் பாரதனில்
ஆலம் விழுதாய் அரவணைத் திங்கே அருள்புரிய
சூலமும் வேம்பும் துணைநிற்க, என்றன் துயர்ச்சிலந்தி
நூலென இற்று நொடியில் விழச்செய் நுதற்பிறையே 41

பிறையணி நாயகி பெற்ற தவத்தினால் பேறளித்துக்
கறைமிடற் றண்ணல் கனிவோ டினிதுறக் காதலினால்
சிறைபிடித் துள்ளம் சிறக்கின்ற இன்பச் சிறகசைப்பக்
குறைவிலா வாழ்வைக் கொடுப்ப வளாமெம் குரைகழலே. 42

குரைகடல் சூழ்ந்த குவலயம் தன்னில் குறைகளைந்தென்
நரைசூழ் பருவம் நலிவுறும் காலம் நடந்திடுமோ?
திரைசூழ் வலைபடு மீனென வாழ்வு தவிப்புறுமோ?
வரைசூழ் வனிதாய்! வளைக்கரம் பாலிக்கும் வான்மதியே 43

மதியாய் ஒளிருமென் வாழ்க்கைப் பயணம் மலர்ச்சியுறக்
கதியாய் இருந்து கரைந்தநாள் வீணில் கழியுமோநல்
விதியாய் விளங்கிட வெற்றிகள் ஓங்கிட வித்தகியைத்
துதியாத நாள்கள் தொடருமோ? காத்தருள் தூயவளே 44

தூமண மாகியே சோதியாய் நெஞ்சில் சுடர்ந்தொளிரக்
காமண மாகியே கற்பூர நாயகி கலந்துறைந்து
பூமண மாகியே பொற்பதம் நாடிப் புகழ்ந்துருகி
நாமண மாகியே நானிங்குப் பாடும் நலமருளே 45

அருளும் அமுதக் கனியே; அகிலத்தை ஆட்சிசெயும்
திருவரு ளே;யுன் திசைநோக்கி உள்ளம் தொழுதிடவும்
இருளும் பிறவி இடர்நீக்கி ஈங்கெனை இன்பமுடன்
தெருளும் மனத்தைத் தெளிவாக்க வந்திட்ட தென்னவளே 46

40 Move all wealth out; bid farewell to my fleeting folly; no more shall
the murky world eclipse me and possess mine in its sway;
ever, henceforth, have I sought you as Mother granting grace.
Love feeding lofty Verkaadu cultivated me, O, Nectarine Milk!

41 As Milky Way spreads across the firmament of worlds,
as plaits of ficus strengthen hold and hug to grace
with trident and Neem tree by, may you snap
the spider's web-line, O, sickle-crescent shape- Forehead!

42 O, Crescent adorned Crest of Queen, by askesis got of yore you conferred weal;
with Lord of stained neck you indulge in love-play, sweet, moist, fruity
shut and snuggling in his heart: your joy wings therein. Won't you grant a life
replete, fast and fertile, won't you, with your kazhal-feet tinkling?

43 Tinker-shuffle of a sea a-dance in soft neap tides girds the twirling globe;
weed out all the pitfalls of deeds there. Would you let me cross grey times, lean days?
Or, would my life pant in grief as fish in a net within the brine's sway? Tell me,
O, highland Lass with bangle-arm covering the sky-moon!

44 Moon glistens;life's sojourn blows hot;refuge you have been;
days in vain lapse; can any pass without worshiping
Lady talent for triumphs to score and pathways
to open, well lit? Save and grace O, Pure!

45 O, Pur Flame fragrant aflame in my heart, O, Camphor's sublimate
equaling the scent of sward wet; mixed with you, I seek and praise
the floral feet of gold thine; I melt and train my tongue
to psalm thy glory. Grant me goodly grace.

46 Grace ripening ambrosial fruit. Your Holiness reigns all worlds;
facing your abode in the direction of it, bows my heart unto.
Be the dark bog of birth removed; now, clarify my confused state;
for this act you are O, Lady from Southern Pantya Land!

தென்னன் குலக்கொடி தீந்தமிழ் வல்ல திரிபுரையே
கன்னல் மொழியில் கவிபாடச் செய்து கசிந்துருகி
இன்னல் தவிர்க்க இலங்கிழை உன்னையே ஏத்துகிறேன்
மின்னல் ஒசியும் மிளிரிடை மங்கையுன் பேருவப்பே 47

பேணுவாய்; வேற்காட் டகத்து விந்தையே; வேம்புதனைப்
பூணுவாய்; உள்ளம் பொருந்தித் தினமுனைப் போற்றிடவே
காணுவாய்; கண்டு கடுவினை போக்குவாய்; கண்ணியள்நீ
நாணுவாய்; கண்ணுதல் நாயகன் காதலால் நாரணியே 48

நாரணி; நல்லற நாயகி; நாகம் தலையணிந்த
ஆரணி; நாளும் அறம்வளர் செல்விநீ ஆண்டருளச்
சீரணி யாகிச் செம்பதம் செக்கச் சிவக்கவந்த
பூரணி; உன்னையாம் போற்றிடச் செல்வங்கள் பொங்கிடுமே! 49

பொங்கும் மகிழ்ச்சி புகுந்தெம் உளத்தைப் புனிதமாக்கும்,
எங்கும் உனைப்பாட இன்பம் திளைக்கும்; இனியவளாய்த்
தங்கும் மகமாயித் தாயே கருணை கனிந்துவரக்
கங்குல் பகலெனக் காலம் கழிவ துனையெண்ணியே 50

எண்ணிய எண்ணத்தில் இன்பம் பெருகிட எம்மிதயம்
தண்ணிய அன்பில் தழைத்திடத் தாங்கரும் தண்ணளிதான்
பெண்ணியல் நாட்டிட பேறு விளங்கிடப் பூதலத்தைக்
கண்ணியல் நாடக மாடிக் களிக்கும் கவிப்பொருளே! 51

கவிப்பொரு ளாகிக் கலந்தாய்; இனிதென் கவிதைதனைச்
செவிப்பொரு ளாகிடச் சிந்தனை தந்தாய்; செகத்தொளிரும்
புவிப்பொரு ளாகிப் புனைகின்ற பாடலில் போற்றுமுயர்
அவிப்பொரு ளாகி அகிலம் அளந்த அழலுருவே 52

அழலாடும் கையினன் ஆற்றல் பெறநின்றிங் காடுகிறான்
குழலாடும் சென்னியள் கூடிக் களித்திங் குலவுகிறாள்;
கழலாடும் கால்தூக்கி ஆடிடக் காதலன் காண்பதெலாம்
நிழலாடும் தேயத்தில் நித்தம் நடத்தும் நடனமதே 53

47 Southern Clan's Creeper! Sweet Tamil speaking Tripuram owner!
In cane sweet diction you styled me to compose, melt mellowed;
to avert mishaps, I adore thy glory; with flash thin waist adorned
with cingulum, to break upon itself you look Dame delight and great!

48 Greatly protect. O, wonder of Verkaadu,you wear the green of neem;
with my heart poised in you daily, don't you find me fanatic?
Why not remove the fell heap of weird deed-dump? Why shy
courteous for love of Metopic-Eye—Lord, O, Narani??

49 O, Narani, O, Virtuous Queen, O Serpent geared Head! O,One adorned
in awesome jewels! All time you are opulent in virtue grown; as you reign
we stand arrayed; your red foot-steps turn more pink in health perfect.
As we praise you, wealth accumulates peaking high!

50 High in cloud nine, with delight, our hearts are clean and sacred;
we sing to our joy your jade of mien; sweet as Mahamayi, you con
the role of Mother; we think on your Mercy by Day, by Night, by neither
thoughtlessly with you as our company in thought!

51 Thought neatly thought out, joy wells up for love to rush
in Passion calm; gráce and caritas as feminine force controls
to enlighten more; you, as Muse of Poesy stage your play
of eyes acting upon the globe as whole!

52 Whole and part as poetic ens in afflatus fused, you sweeten my verse;
bred it worthy of hearing; of its rich inlay for reflection; aren't you
the risen flame calibrating worlds as sacrificial offering
in woven earthly terms aglow in the proven Vast!

53 Astral flames a-dance in an arm of power, twisting with his locks,
waving over his crest; dallies he in embrace with kazhals' consent;
lifting his left, the beloved-he beholds all but the conduct
of cosmos in silhouette zones of yours!

நடங்கண்ட நந்தினி; நாகம் தலைகொண்ட நான்முகியுன்
திடங்கண்ட பிஞ்ஞகன் தேர்ந்து நலங்காணச் செய்திடவே
விடங்கண்ட கண்டன் மிடற்றது நஞ்சின் வினையகற்ற
இடங்கண்ட மர்ந்தாயோ? ஈசன் இடப்பாகம் ஏற்றவளே 54

ஏற்றம் பெறவே இனிதாக உன்னையாம் ஏற்றிடவும்
ஊற்றாய்ப் பெருகும் உணர்வுகள் மன்பதை ஓங்கிநின்று
நாற்றாய் வளரும் நலமார் பயிரென நல்லுளத்தில்
வீற்றிய வித்தகி வெற்றியை வேண்டினேன் மாரியளே 55

மாரி பொழிய மழைமேகம் பல்கிட மாநிலத்தில்
மாரியள் நல்ல வரம்தந்து வையம் மகிழ்வுறவே
வாரி வழங்க வளங்கள் பெருகும்; விரியுலகின்
பேரி டரினைப் பெயர்த்துப் பெருமை புரிபவளே 56

புரியும் செய்கை புகுந்தெம் உளத்தைப் புனிதமாக்கித்
திரியும் புலனைத் திசைமாற்றி நின்கழல் சேர்ந்தொளிர
விரியும் கதிராய் விடியல் பொழுது விளங்கிநிற்கத்
தெரியும் கணங்கள் தினந்தோறும் எம்மைத் திருத்திடுமே 57

இடுகின்ற நெற்றியில் ஏற்றமாய் ஓங்கிய குங்குமத்தால்
படுகின்ற தீமைகள் பட்டெனத் தீருமே; பாருலகை
அடுகின்ற இன்னல் அகலுமே; அன்னை அருட்கரத்தால்
தொடுகின்ற போதே துயரது நீக்கும் திரிபுரையே 58

புரைபடு நெஞ்சம் புனிதமாய் ஆகப் பொருப்பரையன்
அரைபடு பாம்பும் தலையிடை ஆட அணிவிளங்கும்
உரைபடு நற்பொருள் நாளும் உவப்ப உலைபிறவி
திரைபடு தோணியாய்ச் சென்றிட நாளும் துயர்வருமோ 59

வருவாய் வினைகள் விரைந்தே அகற்றிட; வாழ்வதனில்
தருவாய் தகுதி தமிழால் புகழ்பெற தண்ணளியின்
உருவாய் வளர்ந்திங் குலகு தழைத்திட ஓங்குபுற்றில்
கருவாய் உதித்த கருமாரி எம்பெருங் காவியமே 60

54 You are the Queen-Cow Nandini in your own gay-dance zone!
Hooded serpent gears head; four faced feminine charms; eyeing you,
Pignaka Archer gave you worlds to protect; let you con his Left,
a vantage-half to turn off venom in the neck deep and dark!

55 Arc the Vast soaring sweet you do! And we extol you
with sprung feel on perpetual push, as lush nursery
is green sign to rich harvest. In devout hearts as Talent Innate
you dwell, for all laurels, in Victory, O, Maari!

56 Merry rain-scuds gather, clash, flash, rumble and pour;
Maari's Mercy chokes the wide Earth for all to cheer and roar
in unending benefits; resources grow; disasters draw
to a close; for,Maari possesses all as her pride!

57 Pride of shares enters heart; sanctifies us; straying senses
flock to a focus; to reach her kazhal in light of gnosis;
radiant Sun registers dawn; open sidereal hour minutes
the moment in an instant, accurate and fair!

58 Fair vermilion wearing forehead deletes all dire evil;
the heat and plague engulfing the worlds shall cool;
Mother's arm of grace in tender touch as slight excuse,
wipes away all woe; hers indeed is Tripura!

59 Pure, heart in strife turns, as the Rex of Kayilai sports
a snake to belt his waist; and a cobra to hood his crest.
Trope rich words spell benediction to comfort ever; the birthing pool
of a furnace as drunken boat sails the tides, lo, to capsize!

60 Sighs my heart: come, hasten, undo deeds, when would you?
In this birth, by when would the trivial me turn Tamil chaste?
With caritas, may you level us up to envied heights;
your pregnant ant-hill bears a big epic: O, karumaari!

காவியம் உன்விழி; கற்கவோர் பாயிரம் காணுமெழில்;
பாவியம் உன்னடி; பல்லோர் வணங்கிடும் பைந்தமிழின்
ஓவியம் உன்மேனி; ஒப்பிலாப் பேர்கொண் டுலவுகின்ற
தேவியே உன்னைத் தொழுதிடத் தீவினை தீர்த்தருளே 61

தீர்க்கும் வினைத்தீ தொடராமல் உன்னைத் துதிக்கயெமை
ஈர்க்கும் உனதருள் எண்ணினேன்; தாயெனை ஈன்றெடுத்து
வார்க்கும் வடிவத்தால் வாகை கொளவே வயமிழந்தேன்
பார்க்கும் திசையில் பரந்து நிறைவதுன் பேரளியே 62

அளிக்கும் கருணை அகந்தனில் ஓங்கி அலைகடலில்
குளிக்கும் படியாய்க் குளிர்வித்து நெஞ்சக் குவலயத்தைக்
களிக்கும் படிச்செய்து காட்டினில் வீற்றிய காரிகையை
விளிக்கும்நா ளெல்லாம் விடியல்பொழுதாகி வென்றிடுமே 63

வெல்லும் திறத்திற்கு வேல்தந் தவளே; விரைந்துவந்து
சொல்லும் திறத்திற்குத் தால்தந் தவளே; செழுந்தமிழில்
கல்லும் கனியக் கவிதந் தவளே; கசிந்துருக
அல்லும் பகலும் அகத்துணர் வூட்டிய ஆனந்தியே 64

ஏகமாய் நின்றவள் ஈசன் தொழுதேத்தும் ஏந்திழையே
பாகமாய் வீற்றிநின் பாதம் வணங்கிப் பாருலகில்
வேகமாய் நீயும் வெளியாகிப் பக்தியில் வெற்றிகொளத்
தாகமாய்க் கண்கள் தவிக்குமே உன்றனைக் கண்டிடவே 65

கண்வழிக் காட்சி கருத்தாய் அமையும்; கரும்பனையப்
பண்வழி நல்லிசைப் பாடல் பதந்தரும்; பற்றுகின்ற
புண்வழி மேவும் புலைமனம் நீங்கப் புனிதமாகும்
விண்வழி வந்திங்கு மாதவள் காட்டிடும் மாட்சியதே 66

மானொத்த கண்களும் மாமதி ஒத்த வதனமுஞ்செந்
தேனொத்த தீந்தமிழ்ச் சொல்லொடும் வேயொத்த திண்கரத்தில்
கூனொத்த வில்லொடும் கூரிய பாசாங் குசமுங்கரும்
வானொத்த மேனி வளைக்கரம் நீட்டிநீ வாழ்த்துவாயே 67

61 Really your eye is an Epic; its concinnity is a proem to start;
poetic dactyls are your feet; chaste is thy mien , Tamil's pic;
O, nonpareil Devi, as we adore you deign to delete
all dire evil brought down to naught!

62 Naughty deed-stack shouldn't be stored up; nor referred back;
guarding grace may draw the pious; that's verily intent mine.
As you, Mother, triumph with laurel, having brought me forth, brought me up,
I lost my self in thy catch; immense you till all space I turned to see!

63 See, why I chose to dip and get cooled; your compassion gives,
greets, and soars within; in the cordial chamber, delight you instill;
as sap you rise up; on invoking, a spasm sizzles Time's nip
into victorious pinch and power of dawns!

64 Power to conquer, Sakthi lance you have given to Kumara;
also hied you with a word in time; you've given me Tamil to ripen
a rock into an apple, a pebble into a berry! In melt-love of an ooze,
Anandi are you to turn me tumescent, longing night and day!

65 Aye! Ecstatic is Lord whom you adorn and exalt and on
his part you preside manifest; to they that bow unto you,
in super-luminal urge, you speed to nab bhakti in totes;
my thirsty eyes,in craze, for ocular proof, long to view!

66 In view of eye-view, scene as opsis congeals in thought;notes of music
cane- sweet sans joints in passionate pann subscribe songs to steps and states,
in Saccharum hum! Dogged heart dresses the wounds of mortal birth,
turning sanctum. What loftiness! You are SHE, Space dear to gaze!

67 Deer gaze of eyes to doze on;full moon of a face featuring rings;
honey high dulcet Tamil Wordage; lithe bamboo arm holding a hunched
humble bow, sharp cord of a swish,a goad to spear, light-mien,
bangle-on-wrist—with these visibly may you bless: vox dei!

வாய்வரும் சொற்கள்தாம் வாய்மையே பேசும்; வழிபடவே
காய்வரும் போதே கனிகின்ற நாளும் கனிந்துவரும்;
சேய்வரும் காலம் செழிப்பான வாழ்வு சிறந்துவரும்
நோய்வரும் முன்னர் நொடிதனில் தீர்ப்பது நின்திறமே 68

நின்பால் கரைந்திங்கு நேயம் வளர நிமலையுனைத்
தன்பால் பொருந்தித் தகுதிகள் நல்கத் தடங்கருணை
என்பால் செலுத்த இறங்கிட மாட்டாயா? சேயெனையே
அன்பால் அருளால் அரவணைப் பாயோ? அறிகிலேனே 69

ஏனென்று கேளார் இதயத்தில் கொஞ்சமும் ஏக்கமின்றி
நானென்று சொல்லி நயக்கும் அகந்தையார் நானிலத்தில்
ஊனென்று வீணே உடம்பினைப் பெற்றார் உணர்ச்சியற்றார்
கானகம் வந்துன் கமலத்தாள் போற்றார் கடையவரே 70

கடையவன் உன்மீது காதல் கனிந்து கசிந்துருக
விடையவன் தன்னொடு வித்தகி நீயும் விரைந்துவந்தாய்
உடையவன் உள்ளம் உவந்து வணங்கிட ஓங்குகங்கைச்
சடையவன் நின்வசம் தன்னை இழந்திடச் செய்தவளே 71

செய்யும் அறங்கள் சிறந்திடச் சேரும் செழும்புகழ்தான்
உய்யும் வகைதேடி உய்தற்கே என்னும் உயர்கருத்தைப்
பெய்யும் மழையாய்ப் பிழையிலா நெஞ்சினில் பெய்துவித்தாய்
எய்யும் விழிகள் எழில்சிந்தும் சித்தத்தில் ஏந்திழையே 72

ஏந்திசைச் செல்வி; இன்னருள் காட்சியில் ஈர்ப்பதற்குப்
பாந்தள் தலைமிசை பாங்குடன் கொண்டாய்; பசியநெஞ்சில்
மாந்திய பத்தி மயக்கம் எனைமேவ மையலுற்றேன்
காந்தள் வடிவெனக் கைவிரல் காட்டும் கருமாரியே 73

மாரி பொழிந்திட மேகமாய் வந்திங்கு மண்ணகத்தில்
வாரி வழங்குவாய்; வற்றாத வெள்ளமாய் வான்கருணைப்
பாரித் தெழவே பணிந்திவன் வந்தேன் பயன்பெறவே
ஊரது வேற்கா டுறைந்தேன் மொழிகின்றேன் உன்புகழே 74

68 Deity's Voice of WORD is Truth's mouthpiece; in rite of passage
the raw turn ripe; to mellow as boon of a fruit! In distant Time
drawing near, life winged wins the course; before bubo strikes
prison the flu in a hide-out cell in single split by power's resolve!

69 Solved in vicinity for wisdom to grow, let me quarantine
my flawless Nimala that she may tutor and charge me
with all her mercy! O, Why not step down to step me up!
In tight embrace hug me, when would you, tell,when or why!

70 Why, they querry not;nil compunction in heart, they aggrandize
I-ness; wear a flesh hide to wear out in vain on this fourfold Earth;
least aware of the spirit of woods; where unto they enter not
nor praise thy lotus feet, lo, they the lowly!

71 Lowly I in love of love melt most; with Lord upon Taurus,
you, Lady Energy came galloping to me; you indeed made
your possessor in cheers three to bow unto you; made him
lose to you with ganga swollen on his matted locks, completely!

72 Complete virtues all as sanctioned; Dame Fame comes upon to favor;
to live in eternal, is the lofty concept you cross-grained my heart with,
unerring as clear water; sharp darting eyes is stuck in my conscious
with an elegant fill. o, Well adorned weal!

73 Weal philharmonic! To draw all into the grace-vortex thine, upon your head
you wear the canopy of cerulean halo; seized by bhakti and Space,
my heart in silent swoon makes me stand stunned in ravishment
as thy Kaanthal red flower-fingers sign me in, O, Karumaari!

74 Repeat-monsoon clouds pour upon the soil; you grant amain
generously the foison and plenty of Earth; unabated flood
of Mercy on swollen rise; and I in submission come unto you
seeking fruit, settling in Verkaadu, voicing your praise!

புகழ்ந்தேன்; உளத்தால் புகன்ற பெருமையைப் போற்றிடவே
அகழ்ந்தேன்; மனத்தை அகந்தை இலாதவோர் அன்பனைநீ
இகழ்ந்தேன் எனச்சொல்லி ஏற்கா திருப்பாயோ? இன்செயுளால்
நெகிழ்ந்தேன் எனச்சொல்லி நேயம் வளர்ப்பாய் நிறைமதியே 75

நிறைநின்ற அன்பும் நிலத்தில் அறம்பூணும் நேர்த்தியுடன்
மறைநின் றொலிக்கின்ற வாழ்த்தும் வணங்கி வயமிழக்கும்
இறைநின்ற நெஞ்சதில் ஏந்திய பத்தியும் ஏற்றமுறக்
கறைநின்ற வாழ்வின் கசடது நீக்குவாய் காடுறையே 76

காடுறை துர்க்கையள்; காக்கும் கரத்தவள்; காலமெலாம்
பாடற் பொருளான பஞ்சமி; பாங்காய்ப் பரமனொடு
பீடுடைத் தெய்வமாய்ப் பாமரர் நெஞ்சில் பதிந்தவளாய்
ஈடும் எடுப்புமாய் ஈரண்டம் காக்கும் இறையவளே 77

ஏற்றிய தீபமாய் இன்முகம் காட்டும் இளங்கதிராய்
வீற்றிடும் நெஞ்சில் விரிகதிர் ஓங்கி மதிநலத்தை
நாற்றிய பத்தியில் நாளும் வளர்த்தெனை நற்கதிக்கே
மாற்றிய உன்னை மறப்பனோ மாதங்கி மண்ணிடையே 78

மஞ்சள் விரல்களால் மையல் விழிகளில் காரெழுதக்
கஞ்ச மலரடி கிண்கிணி யாகக் கலகலக்கச்
செஞ்சொற் கிளவி சொலும்கிளி தேனாய்ச் செவிமடுப்பக்
கொஞ்சிக் குலவிடும் கொள்ளை யழகின் குளிர்நிலவே 79

குளிக்கும் அருள்வெள்ளம் மூழ்கிக் குடைந்தாடும் கோமதிநீ
அளிக்கும் கருணையை அள்ளிப் பருகி அரவணைத்துக்
களிக்கும்படிச் செய்தாய்; காடமர் நின்கோலம் காண்பதற்கு
வெளிக்கும் வெளியானாய்; வேதத்தின் வித்தான வாகினியே 80

வானாகி மண்ணை வலம்வந்து ஞான மலர்சுரக்கும்
தேனாகி நாங்கள் தெளிவுற நல்ல திசையுணர்த்தும்
கோனாகி அன்பர் குறைதீர்க்க வேற்காட்டுக் கோமகளாய்த்
தானாகிப் புற்றில் தழைத்தாய் நின்காட்சி காணுதற்கே 81

75 Praise I make unto you; to cherish thee wholeheartedly, deep I dig
in the innards; would you reject me, your lover sans I-ness and My-ness,
at heart, me meagre to praise in full! In sweet psalms , I modulate or madrigal—
thus reckoning, may you stay dear and close, O, full Moon on the rise!

76 Risen level of love in full; well wrought perfection on Earth resound
hidden Vedas;- all hail and lose their self unto you..So, given in,
the great-abode of Lord with bhakti appeals : to rise, move,
may you clean the faulting life, O,Woodland queen!

77 Woodland Durga are you; Creatrix too; with serving arms;
song's chore Panchami, the five Act deity for all Time, with Supreme,
your Pride, you are fixed on to the innocent; you are Himavant's
saving two worlds in equal excellence!

78 Excellent lamp, you beam your face in soft sun-shine;
on the heart's throne radiance spreads to guard the intellect
in poise of bhakti; tending us all day and night, passageing
through good; O, how this earthly me forget you, Matangi!

79 Given to lining your luring eyes with collyrium by your auspicious vermilion
touch; to tinkle in your lotus walk, in your chirp of the Vedic word unwrit
as oral drop of honey dew to feed my ears! O, loveliness's legacy,
winsome, pandering as Venus Moon-struck!

80 Moon-lit, wet in grace-flood, you, Gomathi, dive, delve deep and dip
to rise; your Mercy I drink to the lees; your embrace bare maddens
me in swim; wood-nymph gleam thine, wrings the moist SPACE;
O,Seed of Vedas, your Vehicle-mount they are!

81 Aren't you sky enveloping Earth in Mercy merry go round!
Gnostic bud spilled honey! Compass Lordship showing constant North!
Servitor's want removing Verkaadu's Princess! On your own
grown are you as Formica Hill form to view!

காணவும் கண்டு களிக்கவும் காதல் கனிவுடனே
பேணவும் அன்புப் பெருக்கினால் நாடவும் பத்தியினைப்
பூணவும் செய்தனை; பொன்னார் சடையன் புலவிகொள
நாணவும் பெண்மை நயக்கவும் வென்றாய் நடம்புரிந்தே 82

நடங்கொண்ட நான்முகி; நானுனைப் பாடி நவில்வதற்கும்
இடங்கண் டெழுதுமோர் ஏடாய் இதயந்தான் இன்பமுறத்
திடங்கண் டுணர்ந்துன் திசைநோக்கிக் கூப்பித் தொழுவதற்கோர்
தடங்கண்டு கொண்டேன் தடுமாறேன் தோன்றாத் துடியிடையே 83

துடிகொண்ட மெல்லிடை ஆடத் தவழும் சடைமுடியும்
தொடிகொண்ட கையும் துவளாமல் ஆடத் தொனிவிளங்கும்
படிகொண்ட பார்கவி பாதமும் ஆடப் பரதமதை
அடிகொண்ட ஆரணங் கே;யுனக் காட்பட்டேன் ஆய்கலையே 84

ஆயுங் கலைகளில் அற்புதம் காட்டிடும் அம்பிகையென்
வாயுன் புகழ்பாட மெய்யும் சிலிர்க்க வயமிழந்தேன்;
வேயும் மனக்குடில் மேவி உறைந்திங்கு வேற்காட்டிடைத்
தோயும் மனத்தால் தொழுகின்றேன் நல்வினை தோன்றுதற்கே 85

தோற்றமும் கங்கைச் சடையன் உவக்கின்ற சிற்றிடையும்
ஏற்றங்கொள் பாகம் இடமாகக் கொண்டாடும் ஈச்வரியே
சீற்றமாய்க் கடிந்து செகத்தில் தீவினை சேர்ந்தழிக்க
வீற்றிய சிங்கத் தமர்ந்தாய் உலகினை வெற்றிகண்டே 86

வெற்றென வாழ்வுதான் வீணே கழியுமோ! வித்தகியுன்
நற்றிறம் பாடாது நானிங்கு வாழ்ந்து நலிவதுவோ?
பொற்றொடி போற்றாது போக்கற்றுப் போதாகிப் போவதுவோ?
கற்றது கையள வாகினும் என்மேல் கருணைவையே 87

கருவாகிப் புற்றுக் குடிலில் உறைந்தெமைக் காத்தருள
உருவாகி நெஞ்சில் உறவாகி உன்மத்தம் ஓங்கிடவே
திருவாகி நாளெலாம் தித்திக்கு மாறென்றன் சித்தமதில்
வருவாயே வாழ்வை வளர்நெறி யில்வைத்த வாழ்வியலே 88

82 View, rejoice, love, cherish the viewed, in flood of love,
near and foster bhakti, you have made all to;golden matted locks rich Sivan,
as he coursed in and through you, you blushed, abashed,
yet advanced a win and draw, by a chore of dance!

83 Dance-chore doing four-faced One! In my heart's scroll I write your palm,
on the marge of leaf ficus, all I sing, contouring with joy steadfast,
I salute the south-in-north you govern in, with folded hands.
This unfaltering rite I learnt. O,Wasp-waist, view-less One!

84 One with wobbling midriff slim; as you swing locks crawl in air;
arms with wand wave and weave to gesture the second image
a-dance as para-selene; you are Lady preceptor of Bharatam .
O, Uma, I surrender to the sum of all search and art!

85 Art slave to sense as spirit of Vachakam you show, a miracle:
Ambika, hearts beat your praise; frame goose-pimpled, self loses
hold as in roofed hut of manam you lurk trigonic, don't you, of Verkaadu?
In strict conscience I pray for good to begin.

86 Beginning. Ganga wet locks rich Lord's Midriff of Love thin and hid.
Lofty half on left, all composed celebrity are you Lady to the End.
In rage may you chide the evil, its all round effect as a proud
Lioness roaring the woods scoring the win!

87 Vain would a life to fritter away in? Not singing you, Power and Energy?
Need i be weak and frail as a blind mouth hymning hollow?
Blind to golden liana you are, with no go else, simply passing time, timing out?
All I know is bare minima! Why weigh me with Mercy in scale!

88 Scaled down to a hill of an ant you choose to freeze in this hermitage;
to save and grace age?To manifest as heart's kin and pace?
As zeal up-soaring, as weal eternal, in the conscious, to come upon me?
Welcome life-science, elan vital, in the evolute of an ethic!

வாழும் வகையினை வற்றா தமுதாய் வழங்கியெனைத்
தாழும் நிலையதில் தள்ளாமல் செய்த தயாபரையைச்
சூழும் பொழுதே சுகம்வரும்; சோதனை தாம்படர
வீழும் படிக்கியான் வீழினும் காக்கும் மறத்தியளே 89

மறவேன் எதிலும் மயங்கேன்; மலைமகள் மாண்பொன்றையே
உறவாய்க் கருதி உவந்தேன்; உயர்ந்தேன்; உளங்கனிந்து
நறவாய் இனித்து நறுஞ்சுவை தந்திட நாவதனைத்
திறவாய் எனச்சொல்லித் தித்திக்க வைத்திட்ட தேனடையே 90

தேக்கும் கருணைத் தெளிவும் தெவிட்டாத தெள்ளமுதாய்
ஆக்கும் திறமுமெம் அல்லெல்லாம் ஆய்ந்தாங் ககற்றியெனைக்
காக்கும் கருமாரி காலம் கனிவாய்க் கணித்தறிந்து
போக்குமென் தீவினை போந்தது நான்செய்த புண்ணியமே 91

புண்ணியம் செய்துன் புனைகழல் பற்றப் புவிதனில்நான்
பண்ணிய பாவங்கள் போக்கினாய்; வேற்காட்டுப் பூங்கொடியைத்
திண்ணிய நெஞ்சில் தினந்தோறும் தேக்கித் திளைத்திடநான்
எண்ணிய போதெல்லாம் இன்பம் சுரக்கும் இனியவூற்றே 92

ஊற்றானாய்; உள்ளம் உவக்கின்ற பாட்டானாய்; ஓங்கிமயக்
காற்றாக வந்தாய்; கனலாகி நின்றாய்; கவின்விளங்கப்
பேற்றினைத் தந்து பெருவாழ்வு பெற்றிடப் பேதைநெஞ்சில்
வீற்றிய வாறு வினைகளை வேற்காட்டில் வென்றவளே 93

வெல்லும் திறனும் விளங்கிடும் ஆற்றலும் வேம்பினளைக்
கல்லும் உருகக் கனிந்து கவிபாடக் கைகூடுமென்
சொல்லும் பொருளும் துணைநிற்க நாளும் தொடர்ந்துவரும்
அல்லும் பகலும் அணங்கவள் செய்கையை ஐயுறேனே 94

ஐயுற்ற மெல்லிடை ஆரமும் பின்னுற்ற ஐந்தலையும்
மையுற்ற கண்ணும் மலருற்ற பாதமும் மங்கையவள்
மெய்யுற்ற பாகன் மருங்கில் உறையும் மகிழ்பொழுதும்
பொய்யுற்ற நெஞ்சில் புகுபவர்க் கில்லை புரிதலையே 95

89 Ethical life; ambrosial that dries up never; you never pushed me out,
never pulled me down; O, Companion, am I in your surround sound?
Aren't you Comfort that comforts. Even when trials try, proofs probe,
with no sursum corda, don't you lift me up! For me, you, dare- divine,as is wont!

90 I Won't forget; I won't be way laid; sole Patience
of Mountain-daughter makes me feel exalted, elated;
my heart's ripe, tongue all relish, melic honey I am turned
as you have made me bee and hive and honeycomb ever in store!

91 Store of Passion, stored clear, lucid nectar never to satiate, power to make,
unmake, remake,—considering allthat turn me to naught, ward me off
from such and such and save me Karumaari: Time it is; in your calculus
to click or clock, to wave off evil—all Sivai-punya!

92 Punya you bade me do; to cling to your kazhal teasing feet,
you but willed;chased away sins; Verkaadu's Liana in my stony heart,
I cherish through dials of cyclic Time, and swim in the bluff to surge up
as spring and spa of joy ever, as and when I thought.

93 Thought I, you turned on a fount; pat, a song to thrill my heart;
a breeze as if from Himavant, to radiate snowy heat;
plain and fair you gave me weal and will; for me to get great life
of repose innocent to quell deeds from yon Verkaadu!

94 Due power aglow in skillful tiumph of Neem Tree-abiding
nymph divine, if I could sing melting stones, by hot verse,
word and meaning escorting sapience, doubtless would I be
of her acts in long Time, day past day, through aeons over!

95 Overtly, the midriff too thin to behold or believe in; the lace around,
the five hooded head, collyrium lined eyes, flower strewn-feet
and you, resident in part of Lord's, you are happier;
still, lie-laden heart you seldom will to reach!

தலைகொண்ட நாகமும் சென்னிமேல் நின்றிடக் கையதனில்
நிலைகொண்ட சூலமும் தீவினை வென்றிட நெற்றிதனில்
கலைகொண்ட பேரெழில் காட்சியைக் காட்டிடக் காடுறைந்த
மலைகொண்ட மாதை வணங்கிட நன்மை வழிவருமே 96

வழிவரும்; வாழ்வது வாகை தரும்;உயர் வானவளால்
அழிதரும் துன்பம் அகலும்; அறியா தடுக்கிவரும்
பழிதரும் தீவினைப் பாவங்கள் போக்கும்; பருப்பரையின்
எழில்மிகு தோற்றத்தை என்றுமே நெஞ்சினில் ஏத்துவோர்க்கே 97

ஏகமாய் நின்றாய்; இலங்கிழை ஈசன் இடமமர்ந்து
பாகமாய் ஆனாய்; பரவுமென் பத்திப் பயிர்செழிக்க
மேகமாய் வந்தாய்; மிளிரும் உளம்பெற மேதினியில்
ஊகமாய்ப் புற்றில் உறைந்தாய்; உலகத்தின் ஊழியளே 98

ஊழியாய் நின்ற உமையவள்; இவ்வுல குய்வதற்கு
மேழியாய் வந்தெம் மனத்தை உழுகின்ற மாதவளை
வாழியாய் என்றன்பர் வாழ்த்திட வேற்காடு வந்துறைந்த
ஆழியாய் ஆற்றலாய் அற்புதம் காட்டினாய் அஞ்சுகமே 99

சுகங்காணும் உள்ளம் சுடராய் ஒளிர்ந்திடும் சுந்தரியை
இகங்காணும் நல்லோர் இதயத் திலங்கிடும் இன்னமுதை
உகங்காணும் நாளெலாம் உன்னை வணங்கிட ஊக்கமதை
அகங்காணும் பத்தியில் ஆட்பட வைத்தவென் அன்னையளே. 100

96 Reached and stood the test of hooded cobra on your holy crest;
in your arms is trident to trash all evil; on your forehead,
power of concinnity of six field forces and circles found;wood abiding
mountain-daughter you are; worshiping you good returns by the way!

97 Way opens; life wins laurel;soars sky-high grace;
woes that atrophy leave;scandalous sins depart;
when mountain's majesty in heart of hearts
is appealed to, accessed in the quick, and praised for!

98 For all you stood as ONE; fair adorned Eeswara's left you never left;
in Part you turned on Full; what Synecdoche! for bhakti to grow lush
as Mercy Nimbus you came; to beat as foetal heart, on gravid Earth you chose
a hill hidden;a pregnancy paramount! O, World's service of grace!

99 Grace of Uma is deluge too;for worlds to grow, she has come to till;
and to cultivate hearts and hearts; may she be in force,
so they hail; for them in Verkaadu sea-deep power
great is she, miracle showing maiden sure!

100 Maiden-bliss beaten heart glows as flame; beauty viewed
in vision paces the hearts in calm; for yugas this ambrosia
shall be worshiped; the drive is bhakti to which all go
subject in submission totes; SHE indeed is Mother !

OM TAT SAT



# மாங்காடு காமாட்சி அந்தாதி

மாங்கனி விநாயகர் காப்பு

ஓங்கும் புவியில் உயர்ந்தோனே ஒப்பரிய
மாங்கனி பெற்றநல் மைந்தனே – பாங்கொளிரும்
முக்கண் உடையாளின் மோனத்தவம் பாடப்
பக்கம் வருவாய் பரிந்து.

★★★

திகழ்ந்திடும் நெற்றித் திலகமும் திக்கெங்கும் தீந்தமிழால்
புகழ்ந்திடும் செவ்வாய்ப் பொலிவில் அரும்பிடும் புன்னகையும்
நிகழ்ந்திடும் பேற்றினை நித்தம் புரிந்திடும் நின்தவமும்
அகழ்ந்திடும் என்மனம் அன்பில் கலந்திடும் அன்னையளே 1

அன்னை யுனையன்றி யார்துணை ஆகுவர்? அண்டமிதில்
முன்னை வினையை முடித்து முடிவிலா மோகவலை
தன்னை விலக்கித் தகுதிகள் தந்திங்குத் தண்ணருளால்
என்னை வளர்க்கும் இலங்கொளி யான எழுகதிரே 2

எழுகின்ற போதிலும் விட்டிலாய் வாழ்வு எரிசுடரில்
விழுகின்ற போதிலும் மேன்மைகள் கோடி விளையவுனைத்
தொழுகின்ற போதிலும் சொல்லரும் பொல்லாத் துயர்சுமையால்
அழுகின்ற போதிலும் ஆதாரம் நீதான் அருளுருவே 3

அருளும் இனிய அமுதே வணங்கும் அடியவர்க்கும்
உருளும் உலகில் உனையே நினையும் உளத்தவர்க்கும்
மருளும் பிறவிப் பிணிநீக்கி மாசற்ற வாழ்வளிக்கத்
தெருளும் உனது திருவடி யால்சிந்தை தேசுறுதே 4

# KAMAKSHI AMMAN ANTHAADI

## Invocation to Mango Fruit Winner Vinaayaka Lord

O, Lofty on great earth, grab you
did a matchless mango, O', Minor
To sing bright triple eye Devi's
tapas, come beside and aid.

★★★

1 Blazing Tilak marked crescent forehead, budding smile
on ruddy lips lauded in lovely Tamil in all airts,
and askesis thine gaining daily amassing fortune,—
my heart explores in nubile love of you, O, Mother!

2 O, Mother, who else would fondle me but you?In this cosmos,
bunking prior deeds all, tearing the mesh of maya nonstop,
providing requisites, sheltering me in thy shade of cool grace,
aren't you the day-star brilliant in ascent!

3 Ascent or gravity of a fall into flames as of a firefly,
or for sublime zillion shine to flash while praying you
or when bewailing the wordless woeful anguish
of hearts ill-grieved, aren't you the healing grace!

4 Gracious nectarine mellow fruit for servitors subservient
ever call you upon this rolling Earth; their birthing shackles
you undo; sanction them life spotless. Rudderless thought,
reckoning thy holy feet, glows enlightened!

தேசொளி நல்கும் சிரிப்பினைச் சிந்தும் திருமுகமும்
பாசொளி வீசும் பிறைநிலா நெற்றியும் பந்தியாகக்
காசொளி மின்னும் கனகமென் மார்பும் கவின்முடியும்
வீசொளி யாகி விரிந்ததென் நெஞ்சம் விடிந்திடவே 5

விடியும் பொழுதும் வினையின் விளையாட்டு மண்ணகத்தில்
முடியும் பொழுதும் முடிவிலா எண்ணங்கள் முந்துநின்று
நொடியும் பொழுதும் துணைநின்று காத்தருள்; நெஞ்சமதில்
படியும் பொழுதே பரவச முற்றேன்இப் பத்தனுமே 6

பத்தியால் உன்னைப் பரவுவார்க் கின்பம் பயப்பவள்நீ
சத்தியால் நின்னைச் சரணடைந் தோர்க்காற்றல் சேர்ப்பவள்நீ
வித்துநீ; வேத முதல்விநீ; மேவி விளங்கிடும்நன்
முத்தியால் கிட்டுமோர் மோனத் தவத்திற்கும் மூலம்நீயே 7

மூலக் கனலே; முழுமுதல் முக்கண் முகத்தினளே
கோலத் துதித்த குலவிளக் கேநின் குணநலனை
ஞாலத் திசைத்து நறுங்கவி பாட நளினமலர்க்
காலைப் பணிந்தேன் களிப்புற வென்மேல் கருணைவையே 8

வையம் விடியுற மாங்காடு நற்றலம் வந்துமண்ணில்
ஐயனை நோக்கி அனல்மீது நின்றவள் ஆட்படுத்த
நெய்யும் இழையினில் நேயக் கவிதையை நானிசைக்க
நையுமோ? நெஞ்சம் நலிந்து திரியுமோ? நாயெனவே 9

நாய்படும் பாடுபோல் நானுற்ற நெஞ்சம் நடுங்குவதோ?
நோய்பற்றி என்றும் நுகத்தடி மாடாக நோவதுவோ?
பேய்பற்றி வாட்டிடும் பேதை மனந்தான் பிதற்றுவதோ?
காய்முற்றும் மாற்றிக் கனிவிக்க வேண்டுமென் கண்மணியே! 10

கண்மணி; நல்ல கருத்தூறும் சொன்மணி; காத்தருளும்
ஒண்மணி; ஓங்காரத் துள்மணி; நன்மை உவந்தளிக்கும்
பெண்மணி; அன்பின் பெருமணி; எந்நாளும் பேதமிலா
மண்மணி; வேதத்தின் மாமணி யாகிய வான்மணியே 11

5 Ends meeting means of smiles you spill from your fair face;
lunar crescent-forehead thine beams crepuscular bezants of silver;
breasts and long locks cascade gold;—all pervade the heart's
expanse to rear up dawn auric at daybreak!

6 Break diurnal or play's finale of deeds enacted on this Earth,
or cessation of thoughts in unsigned out mind, supporting you stand;
even as in my heart, your name echoes accented,
my 'I' and 'my' turn to naught leaving me a lone devotee!

7 Devoted if we hymn you, you grant the fruit of bliss; to secure power,
if we seek refuge, you, forthwith hike us high. Seed-letters and sounds
Bereshith are but you; Ens Primordial of Vedas are you; the mastery
of Mukhti risen from the root rare of dormant askesis are simply you!

8 U-turn the plaits of eternal ficus roots you do. O, Foremost,
First Trine-Eyed ONE! O,Clan's Lampion glowing all fair!
O,Finer Attribute matching vast worlds! For me to verse sweet,
fastened to lotus-feet and feel exalted,with Mercy treat me!

9 Meontic Micro-Macrocosms to decipher dawn, you deigned to come
upon Maangaadu, to face Lord upon flames, to dictate unto me,
to accord a sequence of verses as a thread of ghee. Would ever
this thread foil or heart frail fail as a roaming dog?

10 Dog-tired need my heart flutter in fright, or like a tethered
bullock sore and sick, need it wilt in yoke, or ghost-haunted
need the fatuous frame prattle and babble? Ripen and mellow
the raw me to ripeness never to rot, O, Pupil of my eye!

11 Pupil of my eye! Concept carrying WORD! Saving grace- exuding
lumen gemstone! Ringing campagna of Pranava OM!
Good breeding maiden jasper! Love's crystal quartz!
Undifferentiated oyster pearl! Vedas' crest jewel of a star celestial!

வானமும் வையமும் வாழ்ந்திடும் வண்ணம் வளஞ்செறிந்த
ஞானமும் யோகமும் நாடி வழங்கிடும் நாயகியுன்
தானமும் குன்றாத் தவமும் அமைதி தருமுனது
மோனமும் செவ்வாய் முறுவலும் நித்தமென் முன்னிற்குமே 12

நிற்கும் வடிவத்தை நித்தம் நினைந்தென்றன் நெஞ்சுருகிக்
கற்கும் வகைசெய்த காமாட்சி உன்றன் கழல்பணிந்தேன்
பொற்குவை கோடி பொருந்திட வேண்டேன்என் புண்ணியத்தை
விற்கும் நிலையது வாய்க்காமல் காப்பதுன் விற்றிறமே 13

விற்பயில் கையில் விளங்கும் கரும்புடன் மென்கரத்தில்
சொற்பயில் கிள்ளையும் தாங்கிய என்றன் சுடர்க்கொடியுன்
பொற்றிகழ் பாதம் பொருந்தினேன் என்றும் புகலிடமாய்
நற்பத நாயகி நின்புகழ் பாடிடும் நாளிதுவே 14

நாளும் கிழமையும் நின்தலம் நாடும்; நமைநடத்தும்
கோளும் உனதருட் கொள்கையில் செல்லும்; குவலயத்தில்
நீளும் செயல்நின் நினைப்பில் நிகழ்ந்திடும்; நீஎதற்கோ
வாளும் கரும்பும் வளைக்கரம் கொண்டனை? ஆரணங்கே 15

ஆரணங் கென்றன் அகம்கலந் தின்ப அருள்பொழியக்
காரண மாகிய காரிகை கண்டு கனிந்துவரப்
பூரண மேவிய பொற்பதம் அங்குப் பொலிந்துநிற்கப்
பாரணங் காகிய பார்வதி என்னில் பதிந்தனளே 16

பதித்த இதயம் பரிவுடன் காக்கும்; பதமலர்கள்
உதித்த கதிராய் உளந்தனில் ஓங்கி உவகைதரும்
துதித்த கரங்கள் தொடர்ந்துனைப் போற்றிடத் தீவினைகள்
விதித்த விதிபோக்க விண்ணில் ஒளியாய் வருபவளே 17

வருமணம் வாழ்விக்க வந்த வளர்பிறை மங்கையவள்
திருமணம் ஈடேறச் செய்கின்ற தேவி; திகழ்ந்தொளிரும்
பெருமணம் ஓங்கிப் பூங்காடாம் மாங்காடு பேர்விளங்கத்
தருமணம் வாழ்வின் நிறைவாகும் தாயுன்றன் தண்ணளியே 18

12 Celestial cum terrestrial to fare perpetual, you concede
to grant fertile gnosis and yoga to conjugate, O, Lady Supreme!
Your ever giving gesture and askesis unabated promise calm;
silence and smile serving sanguine lips loom all seasons in my front!

13 Front in form stands in good stead; seems my heart melts therein;
you made me cultivate all lore, O, Kamakshi! I submit to your Kazhal-Feet.
Never I crave for a heap of gold. May you push me not to the last
precincts to pawn punya whatever in piteous taxing!

14 Taxophilite arms thine arch sugar-cane gently. O, my luminous Liana,
Elaine parrots chirp on your tender digits! Your golden feet-pair
adorned in thandai is asylum to me, your soft nimble steps and stops-
I chant their thud this day for Ages!

15 For Ages shall thy shrine be dear to near; orbs that walk us
through births wobble in your thetic Will; your acts everlasting
in cyclic mundi go on in your thought. Why then wield
a sword and cane in bangle charmed wrists? O, Fair Dame!

16 Dame Fair fused with cordial innards of rain moist grace-
a cause viewed in her tawny dark hovering perfect in an auric flight
of steps glowing up there, yonder,—thus, lifting, even thus,
Parvathi, Mount Earth's Dame on me made the deep impress!

17 Impressive heart of compassion protects; feet flowers as beams
of Day-Star beckon and soar to hike my mirth; my worshiping
arms weave and confabulate thy praise; evil deeds burn up;
weird fate wanes. O, Patroness, land as sky sent light arriving!

18 Arrive to nestle as fragrance of waxing crescent, may you; be our Devi
for weddings may you, the aegis of grace; to flame up as Agni's presence
sublime, for floral arbor rich Maangaadu, more than a place name,
what you bestow is vital sanction ample as Maternal cool gift!

தண்ணார் கருணைத் தகவே; தலம்வந்த நாயகியே
பெண்ணார் அமுதேயுன் பேரின்ப வெள்ளம் பெருகிவரப்
பண்ணார் கவிதைப் பொருளே;இப் பாரிடைப் பல்லறங்கள்
கண்ணால் கனிவித்துக் காக்கின்ற காடுறை காரணியே 19

காரணி கற்பகச் செல்வி கயற்கண்ணி; கானுலாவும்
பூரணி; வைணவி; புண்ணியம் வையத்தில் பூத்தருளும்
நாரணி யாகி நலம்தரும் நாயகி; நற்றுணைவன்
ஓரணி யாகிட உன்துணை வேண்டினன் ஓங்கிடவே 20

ஓங்கார மாகி உலகம் புரக்கின்ற உத்தமியே
ஆங்கார மாய்நின்ற அண்ணலும் உன்னில் அடங்கியிங்குப்
பாங்காக யார்க்கும் பயன்தரும் நின்பாத பங்கயத்தை
நீங்காமல் வாழ்ந்திட நீயருள் தீயிடை நின்றவளே 21

நின்றே தவம்செய்யும் நேரிழை நின்னை நினைந்தவுடன்
கன்றிடம் தாய்ப்பசு காட்டும் கருணைக் கனியமுதாய்
இன்றே நிறைந்திங் கிதயம் குளிரவும் இன்பவெள்ளம்
நன்றே பெருகவும் நன்மைகள் ஆயிரம் தாள்தருமே 22

தாள்தரும் ஓவியத் தாமரை மேவிய தண்ணளியும்
வேள்தரும் கூர்மை விழிகளில் மின்னும் மிளிரொளியும்
நீள்தரும் கூந்தல் நிலவொளி சேர்க்கும் நிறையொளியும்
கோள்தர நின்று குலவிய தோவொரு விண்ணெனவே 23

விண்கொள வந்த வியப்பே வணங்கிடும் விண்ணவர்
மண்கொள வந்திங்கு மாங்கா டுறைந்த மலர்மணமே
கண்கொள வந்தென் களிப்பில் நடஞ்செயும் கற்பகமே
எண்கொள நெஞ்சம் இணங்கிட வந்தின்பம் எய்துவதே 24

எய்யும் கணையென் றிலங்கும் விழியாய், இருள்வினைகள்
பொய்யென் றகலப் புனைகழல் போற்றினேன்; பூதலத்தில்
உய்யும் வழிதேடி உன்புகழ் சாற்றினேன் ஓங்குமருள்
பையப் பொழிந்துநீ பாலிப்பாய் அன்புடன் பாசமுமே 25

19 Cool complete Mercy qualified! O, lady deign to dwell as ambrosial
feminine spell! May thy great bliss flood in spate; may you be the theme
poetic of tuneful paeans: On anima mundi, may your looks reveal rank
virtues to fullness ripe, concealed in the woods, as cause of causes!

20 Causa Causae! Kalpaka tree opulent! Fish-eyed Dame! Sylvan nymph in sum!
Protectrix! For punya to proliferate in the stasis of vast world
and bloom forth in sprays, may you fertilize as Narani—your half
is adornment Right, for his Left to reign with you!

21 With you as Pranava OMworlds all you foster sublimely;
Lord awesome stays subdued within you; in nearness aptly,
fruit yielding feet lotuses thine for me to cling to ever,
may you Maangaadu indweller,grace standing by.

22 Standing by tapas you do all adorned, in glory appareled;
the moment OI think on, as would mother cow low to her calf
in compassion sheer with milk of kine-ness, you fill right away
my heart to full, joy to flood, and myriad good your feet-pair to give!

23 Giving feet- pair is picturesque lotus pellucid with coolth;
sharp eyes spear to dazzle with relish electric; long locks
abound with selene serene light without want—all these,
cosmic orbs circle in thy sky as if to wonder!

24 Wonder of the cerulean sky! The bowing Sky-gods hie to brace
the Earth of fragrance governed by you, the flower of Maangaadu.
O,Kalpaka dancing in delight! Eye-fulls of thy dance rob me to watch!
On what count may this be? Heart in concord with joy attained, thou art!

25 Dart of a grace mailed as though is thine! The murky deeds fall down
as falsities;I praise the decked feet thine; On this Earth,seeking the path
to life eternal, I aver your praise. Soaring grace may you shower
from above and tone me up with love impassioned!

பாச மிகுந்த பரமனின் கண்களைப் பொத்தியதால்
நேச மிழந்து நிமலன் நினைந்த நெடுந்தவத்தால்
ஈசன் மனத்தில் எழுந்திட்ட கோபம் இறங்கிடவே
பேசும் தவத்தின் பெருமைக் கிடமானாய் பெண்மயிலே 26

பெண்மயில் நின்புகழ் பேருளங் கொண்டிங்கிப் பேசிடவும்
கண்ணினில் நின்னெழில் காட்சிகள் ஆயிரங் கண்டிடவும்
பண்ணிசை யால்நினைப் பாடிப் பரவப் பயனுறவும்
மண்ணில் எனக்கருள் மாங்காடு பூத்துள மாமலரே 27

மாமலர் மேவும் மலர்மகள் வந்துபொன் மாலையிட
நாமகள் நல்கிய நற்றமிழ்ப் பாடல் நயந்திசைக்கப்
பூமகள் அன்புடன் போற்றியே மங்கலப் பூச்சொரிய
ஓமெனத் தோன்றி உலகோர்க் கருள்வாய் உயர்சுகமே 28

சுகமுணர் வாழ்க்கையும் சோதியில் நின்று சுடர்ந்திடுமுன்
முகமலர்ப் பார்வையும் மோனம் விரிந்து முனிவகன்ற
அகமலர் எண்ணமும் அன்பர்க்கு வாய்க்க அனுதினமும்
மிகமலர்ப் பூசனை மேவும் மருங்குலாள் மாணடிக்கே 29

மாங்கா டுறைந்த மலரைத் தொழுது மகிழ்ந்திடவே
பூங்காடு மேவிப் பொறிவண்டாய் என்மனம் போய்த்திரிய
ஏங்கா திருக்கும் இதயங்கள் பூமியில் ஏதுமுண்டோ?
பாங்கான நின்கோலம் பாரா தவர்க்குப் பழிவருமே 30

பழிசெய்து கெட்ட பாவங்கள் போகும், பராபரையை
மொழிசெய்து பாடவே மோனத் தவமங்கு முந்துநிற்கும்
விழிசெய்த புண்ணியம் மாங்காடு கண்டு வியந்துருகித்
தொழில்செயக் கற்றது காரணம் தூய சுடர்முடியே 31

முடிமிசை நேர்க்கோட்டில் அக்க மணிமாலை முன்னெழுந்த
உடுமிசை வானில் ஒளிரும் நிலவாய் உதித்ததுவோ!
அடிமிசை காணாத அண்ணலை எண்ணி அரியதவம்
குடிமிசை ஓங்கவோ மாங்கா டுறைந்தாய் குலமுதலே 32

26 Passionate eyes of supreme ONE, didn't you shut once? For that play,
weren't you forced to leave for here, meditate now on the Flawless ONE
in ever-during tapas to quench the fouling fury of His!
And hence, fabled fame favored your feminine peck! O, Peahen proud!

27 Proud female Peafowl, to chat your glory of great grace here,
to gaze numerous elegant scenes of thy feats by eyes mine
in keen ken, to hymn thy look in grace-abounding panns known,
bless me among terrene things,O,Queenly flower in Maangaadu blown!

28 Blown red lotus-borne she garlands you with gold; Dame Saraswathi
on the Tongue of WORD indites a Tamil psalm and Dame Earth
in service offers auspicious flowers to thy feet. OM you show up
soundly to sanctify the world with lofty joy!

29 Joy-bred life to stay poised in your lumen frame and glow, well before,
your face-lotus beams upon, like silent moon, free from smirch,
the heart-lotus of servitors think; for such to go, may thy gloried feet
be strewn with flowers in pious rites!

30 Right away Maangaadu flora be propitiated and pleased;
let my manam bee buzz in the floral arbors and flit across!
Are there hearts in our kind that beat not fast for a like feel!
They that fail to view your form proper are a bane and a blame!

31 Blame worthy sins bid goodbye; sing our supreme Sakthi
in WORD and Tongue well wrought; askesis as observance shall advance us;
Eyes' Tapas is Maangaadu Woodland. Amazed, melting, they trickle tears
in proclaiming Style and Faith: Cause:Pure Flame Crest!

32 Upon the Crest line up beads of ganitrus straight; stars at Vespers
rise a-fore as mock moons, don't they? Contemplating on Lord
whose ends are unseen by all, dear tapas you do intensely,
abiding in Maangaadu, don't you, o,.Clan's Prime?

குலமுத லான குணநிதி மாங்காட்டில் குன்றெனவே
நிலமுத லாகியே நீநின்ற கோலம் நிமலனவன்
நலஇத யத்திலே நாட்டியம் ஆடியிந் நானிலத்தில்
பலவித நன்மைகள் பாலிக்கும் எண்ணத்தைப் பற்றியதே 33

பற்றிப் படர்கின்ற பல்வினை மாங்காட்டில் பட்டொழியும்
சுற்றி வரும்போதே சோதனை நீங்கிச் சுகம்விளையும்
வெற்றி யுறச் செய்யும் வித்தகி நின்தவம் விண்புகழ
நெற்றி நடுவில் மணிகொண்டு நின்றாய் நெருப்பிடையே 34

நெருப்பிலே நின்ற நெடுந்தவ நாயகி; நெஞ்சமெனும்
பொருப்பிலே தோன்றிப் பொலிந்திடும் சங்கரி; போற்றுமுளத்
திருப்பிலே தங்கி இழையும் சடாதரி; ஈங்குறைந்து
விருப்பிலே அன்பை விதைத்த விமலையை வாழ்த்துவனே 35

வாழும் பொழுதை வரவாக்கி யுன்னை வணங்கிடவும்
பாழும் இருள்மனம் போக்கிட நித்தம் பணிந்திடவும்
தாழும் தலையும் தொழுகின்ற கையுமாய்த் தாள்மலரில்
வீழும் பொழுதிலே வெட்கியே ஓடிடும் வெவ்வினையே 36

வெவ்வினை சாராமல் வெற்றி யளிக்க விரும்பிவந்து
செவ்விய சீரடி சேர்ப்பாள் சிறுமைகள் சேர்த்தழிப்பாள்
அவ்வியம் வாரா தணைத்தே அபயம் அளித்திடவும்
எவ்வினை எம்மை எதிர்த்திடும்? ஏந்திழை ஏத்திடவே 37

ஏத்தித் துதிக்கின்ற நாவும் எளியேன் எழுத்தறிவும்
பூத்த விழிவாசல் போந்தகண் ணீருமுன் பூவடியில்
காத்துக் கிடக்கின்ற கன்னியர் கூப்பும் கரதலமும்
சாத்தும் மலருமுன் சந்நிதி தன்னில் சரித்திரமே 38

சரித்திரம் பேசிடும் சீர்மிகு மாங்காடு சேர்ந்துவிடின்
இரிந்த கொடுமை எதிர்த்து வருமோ? இளங்கதிராய்
விரிந்த முகத்தாளே வில்லேந்திப் போர்செய்த வித்தகியுன்
பரிந்த திருப்பாதம் போற்றிட இன்பப் பொருள்தருமே 39

33 Prime most is the main of thy attributes; as a mighty mount
in Mangaadu you the foremost stay in form shipshape; flame- dance
in the goodly heart of the Flawless ONE; in this fourfold world
many a benefit you bestow-this saving thought aspires!

34 Aspiring, gyrating deed-weeds several shall wither in Maangaadu;
just go around, trials cease; treasure troves wheel by; triumph granting
Lady Talent are you! Your askesis for the celestial deities to praise,
you stood as Tapas incarnate with lit stone mid-brow all aflame!

35 Flame-field-fastened fabulous Tapaswini, in the heart-mount
you teeter up showing as Sankari, auspicious; wearing locks
immense, you play with propitiating souls; indwelling here,
you sow Love in Flawless ONE; may we praise you.

36 Unto you for us to bow the live moment is in come;
for the chaotic murky mind to go, may we bow unto you daily;
with head hung humbled un-split, arms folded in worship,
as we surrender to your feet-lotuses, put to shame flee fell deeds!

37 Deeds foul not to foul us, will your advent and help us score a win?
Annex us to your ruddy feet, privilege us to feel the proximal, will you?
Classically chosen good you give; un-envied, may we be hugged
close with 'fear not' sign! Which deed can ditch us hence? For
She our defensive we do hail!

38 Hails my tongue, my literacy due, my tearful love proclaims
in and through my eyes; flocks of maidens clap and hail
your floral feet in enduring wait; flowers offered in your holy
precincts characterize the tell-tale tale!

39 Tales shall speak ells of history in classical Tamil bred Maangaadu
as we near; would any cruelty challenge any? O,Young Sunny faced
generous One, arching the bow, you waged a war; on worship
of thy concerning feet holy, Ens of Bliss shall result!

பொருள்வந்த போதெல்லாம் புண்ணியம் செய்யாது போற்றுமுயர்
அருள்வந்த காலத்தும் ஆசை அலைந்திட அல்லலுற்று
மருள்கொண்ட என்றன் வறுமையைத் தீர்த்து மகிழ்வுபெற
இருள்கொண்டு சூழ்ந்த இழிவினை நீக்கி இடர்குறையே 40

இடரினும் நெஞ்சம் இருளதில் ஆழ்ந்திங் கெதிர்வினைகள்
தொடரினும் மண்ணிடைத் தீராத் துன்பங்கள் தோன்றியென்மேல்
படரினும் பட்ட மரமான வாழ்வினைப் போக்கிடவே
சுடரினும் சோதியாய் நின்பாதம் என்சென்னி சூடுவதே 41

சூடுவ துன்பதம்; சித்தம் தெளிந்து சுகம்விளைய
நாடுவ துன்தலம்; நாளெல்லாம் உள்ள நடுஇறுத்திப்
பாடுவ துன்புகழ்; பக்திக் கடலில் பரவசமாய்க்
கூடுவ தின்பங் குலவிட வந்தாய் குலமகளே 42

மங்கை திலகம் மதியாகி வந்தென் வளம்பெருக்கச்
செங்கை விரலதன் சின்முத் திரையால் செகமொளிர
நங்கை விழியில் நளினம் மலர்ந்து நலமருள
அங்கை சிவக்க அறம்பல ஈனுமென் அற்புதமே 43

அற்புதம் காட்டும் அனலின் வடிவே; அணிவிளங்கும்
கற்பக மாகிய கன்னியே; நின்தவம் காண்பவர்க்குப்
பொற்பதம் தந்து பொலிந்திட நன்மைகள் பூத்தருள
நிற்பவள் தன்னை நினைந்திடத் தீவினை நீங்கிடுமே 44

நீங்கா துறைந்த நிமலனைக் கண்பொத்தி நீண்டவிருள்
தேங்கவும் வையம் சிதறவும் நீசெய்த செய்கையினால்
ஓங்கார மான உத்தமன் பொங்கி உனைமுனிய
மாங்காடு மேவியே மாதவம் செய்தனை மஞ்சரியே 45

மஞ்சொக்கும் மேனி நிறத்தாளை மாங்காடு வாழ்வஞ்சியைப்
பஞ்சொக்கும் பாத முடையாளைத் தஞ்சம் பயப்பவளைக்
கஞ்சொக்கும் நீல நயனங்கள் காட்டிக் கனிபவளை
நெஞ்சுக்குள் நெய்து நிறைப்பவர்க் கின்பங்கள் தண்ணளியே 46

40 Ens resulting, when wealth is got, we fritter away doing none of punya;
Grace resulting when boons are got, by desires swayed, we are given to woe;
Murk-struck am I; annul my penury my sole dowry! O, Gowri
For me to gain happiness undo Dark, Deed, and Hurdles

41 Hurdled though, heart in Dark heeds the murmur of deeds' sequel;
on Earth ceaseless sorrows contract me spreading as a contagion;
withered tree of life is epidemic-sick; to cure all that ail,feet of thine,
the flaming lumen, may my head submit to and wear!

42 Wear I do the print of thy feet; stepwise, freed from angst, for joy to spring,
I seek thy goodness; in midmost adytum of my heart,
praise and psalm your glory I do; in bhakti's main, in trance supreme,
I love to conjugate with you. O, Clan-Patroness!

43 Patroness's Tilak mark mimes moon to enrich earth sheen; red henna hued
palm and digits with conscious phases of signs contour the worlds;
maiden-eyes rise lotuses high among waters sacred; the hands that give
flush and blush fostering virtues galore—a miracle!

44 O, Miracle play of a mien of flamboyance! O,omate Kalpaka tree giving all for all!
O, Secret Sacred Lady Divine! For they that watch your Tapas, you show
your auric feet and grant the summum bonum! So you abide in thought;
the aspirant's evil deeds dire readily for good, leave!

45 Leaving never the Flawless ONE, you made Him shut eye just for a trice;
precipitous Dark stagnated long; orbs and orbs orbited berserk;
in thy tricky try of a bloomer, you wrought an entropy! Om Supremo
fraught with fury mandated you to Maangaadu and Tapas, O,Mango Bloom!

46 Mango-mellow is thy mien in hue; Maangaadu creeper, soft silk-cotton stuff
is your step; refuge you are to seekers sure; blue Nelumbo eyes
akin to red Kimsuka leafless, like a net trap us all; for they that weave you in,
joy abounds in a bout of coolth!

நண்மைக் கலந்திணில் பாசாங் குசமும் தனுக்கரும்பும்
திண்மை புனையும் திருநெற்றி தன்னில் திகழ்மணியும்
உண்மைப் பொருளும் உலகிற் குணர்த்து முயர்தவமும்
நண்மை பொலியாய்த் தமிழென நின்று தளிர்த்திடுதே 47

தளிர்நிறம் பெற்றநல் தையலே நின்தவம் தாரணியில்
தளிர்கின்ற நன்மைகள் கோடியாய் வந்தருட் கோலமிடும்
வளர்கின்ற யாவரும் வாழ்வில் உயர வழிவகுத்துக்
களர்நில நெஞ்சைக் கழனியாய் மாற்றுமுன் கைவண்ணமே 48

கைவண்ணம் இன்பக் கரையினில் சேர்த்துக் களிப்பருளும்
மெய்வண்ணம் பாரினில் மேன்மையை நல்கி மிளிரவைக்கும்
மைவண்ணம் போன்ற மனவிருள் நீங்கி மகிழவைக்கும்
பொய்வண்ணம் முற்றிலும் போக்கி ஒளிருமென் புண்ணியமே 49

புண்ணிய மேவும் புனிதையே உன்னருட் பூங்கழல்கள்
நண்ணிய யார்க்கும் நலம்பல நாளும் நயந்தருளும்
எண்ணிய எல்லாம் எளிதில் வழங்கி இதயமதில்
புண்ணது போக்கும் மருந்தென வந்து பொருந்துகவே 50

பொருந்திய நல்லோரைப் போற்றிடும் நட்பும் புனிதமாகித்
திருந்திய வாழ்வும் தெளிந்திடத் தந்தாய்; திகழ்சடையோன்
அருந்திய நஞ்சை அடக்கிய நாயகி ஆருயிர்கள்
வருந்திய வாட்டத்தை மாற்றி மகிழ்ந்தருள் மண்ணிடையே 51

மண்ணி லொருவின் ணகத்தை யறிந்த மறையவளைப்
பெண்ணி லொருபே ரொளியைப் பிறையோன் பரவுகின்ற
கண்ணிய நற்றவக் கோலத்தை மாங்காட்டில் கண்டிடவே
நண்ணி வருவார் நலம்பல பெற்று நெறியுறவே 52

நெறிநின்ற பண்பால் நெருப்பிடை நின்ற நிமலைதனை
வெறிநின்ற பத்தியால் மேவி வணங்கிடும் வேய்புரையைப்
பொறிநின்ற போக்கில் புகுந்தநற் பூரணி பொற்பதமென்
தறிநின்ற வாழ்வு தளர்கின்ற போதும் திகழ்ந்தோங்குமே 53

47 Cool in thy arms, you hold a Paacam cord, a goad to check
and cane sweet as epithet; firm of heart, thy forehead shows
the stone as precious pendant; with Ens true, you tutor the world
Tapas topmost— all these as Tamil and Light thoughts and shade green!

48 Green mien is thine, O, goodly Maiden! Your Tapas on this spinning world
shall breeze million-fold to comfort and shape all; for to exalt all in life,
a way you pave, and water the dry arid red-hot heart-scape
to fertile verdure! What handiwork!

49 Handiwork shores us up on the coast of joy and frenzy.
Holy mien increases the world's good and highlight its merit;
collyrium dark murk of mind is dispelled to delight all; the color of lie
is bleached in toto to clarify what is Punya,O!

50 Oh, Punya rich sacred One, your graceful floral kazhals and gait,
whoever reach unto shall be bestowed all benefit due; whatever aspired
for is given with ease; and unease shall heal as panacea proper
turns the tide into felicitous fitness!

51 In fitness of things is friendship with the greats; sanctimonious life
simple you have given; when flaming locks-rich Lord gulped venom
you but stayed it in his throat; dismiss being's waywardness
and confer grace and cheer on Earth!

52 Earthly and Ethereal bliss you made, O, Vedic hidden Ens! O, Lustre great
in the feminine world, the crescent adorned ONE praises you for
your courteous askesis fair in mango woody groves;come hither
soon for many to be led in ways ethical!

53 Ethically poised as flame of flames, flawless are you; in urge of Bhakti,
the worshiped bamboo pillar, in perfect round you have entered;
your auric feet edify my woven life, though labyrinthine;
lift me up turn by turn, with gleam and gloom!

ஓங்கார நாயகி உன்வாசல் வந்துநான் ஓமெனவே
ரீங்காரஞ் செய்தங்கு நின்பேர் இசைக்காத நாளுமுண்டோ?
பாங்காகும் பத்தியால் மாங்காடு மேவிடப் பேறளிப்பாய்
ஆங்காரம் நீக்கி அகத்தில் சுடரேற்றும் ஆய்விளக்கே 54

ஆய்முத் தனைய அழகே; அகிலம் அணிவிளங்க
வேய்முத் தனைய இளநகை காட்டி மகிழ்ந்திடச்செவ்
வாய்முத் துதிர்க்கும் கிளியாகி வாயார வாழ்த்துவாயென்
சேய்மனம் நின்னடிச் சேர்ந்திட நின்புகழ் செப்புவதே 55

செப்பிடு வித்தையில் சிந்தை செலுத்திச் செயலிழக்கும்
தப்பித வாழ்வதில் தஞ்சம் புகுந்தேன் தடங்கடலின்
சிப்பிக்குள் அப்பால் சிதறிய முத்தினைச் சேர்ப்பதற்கே
ஒப்பிய உன்னை ஒருகணத் தெண்ணினேன் ஓடிவாயே 56

ஓடிடும் வெள்ளமாய் உள்ளத் துதித்துன் உவகையில்நான்
கூடிக் கலந்து குணமெனும் சோலை குலவிடவும்
தேடிய அன்பில் திளைக்கவும் மாங்காட்டுத் தேன்மொழியை
நாடியே ஏகிடும் நாளெது? நன்மைகள் நாற்றிசையே 57

நாற்றிலே காண்பது நற்பயிர்; நாளும் நலம்வளர்க்கும்
சோற்றிலே காண்பது நின்னுரு; அம்மையே; சோர்ந்துலகச்
சேற்றிலே வீழினும் தேகம் சிதையுமோ? சிந்தனையின்
ஊற்றிலே நீயில்லை என்றால்என் உள்ளந்தான் ஊனமாமே 58

ஊன மிகுந்த உலகதனில் உன்னை உளம்நினைந்து
மோனம் புரிந்து முகிழ்த்த தவத்தால் முகமலர்ந்து
வான மளந்திடும் வாஞ்சை வளர்ந்திட வண்டெனவே
கான மிசைக்கும்மாங் காடு கருதினேன் கண்ணியளே 59

கண்ணிய வாழ்வில் கடுந்தவம் கண்டு களிப்புறவும்
எண்ணிய எல்லாம் எமக்குத் தரவும் இனியவாழ்வில்
புண்ணிய பேறுகள் போற்றவும் பொற்பதம் பூவுலகில்
நண்ணியே வந்ததோ! நாளுமே மண்ணில் நலமருளே 60

54 Om- form goddess! To your threshold, subliminal me has come
doodling OM with resonance due; not a day passed in transgression
of the threshold limit. Won't you gift me bhakti to prevail with thee
in Maangaadu! Won't you light me within to keen your phases in choice!

55 Choice pearl fair for all worlds to ornament! You beam your argent smiles
bamboo spilled pearls like, and gladden your devotee.
Come and perch as a parakeet chattering words of spell to bless
mouthfuls of boons; my chicken heart joins thy feet to lisp their glory!

56 Gloried is the spell of magic in which thought is caught and action suspended:
for such a life, I sought refuge in you; to gather back the pearls
into their oysters which spat them in the main, I sensed your consent;
in an instant recalled; unto me hence rush forth!

57 Rush of flood like rise in heart delights cordial throb; and ebbs
with the orient in the surrounding grove; wallowing in the searched
for love I keep wondering, when would the neap tide be to gain
access to Maangaadu's Honey word? O, Dame, assent squarely!

58 Square yield is foreseen in nursery; in daily intake of feed, is but glimpsed
your form;O, Mother, tired, bogged in the mire of the world,
would my body survive wilting? Except you monitor mine,
the fount of thought is seldom sprung; my heart is but a limper sure!

59 Limping world is overturned; wherein thinking on you, in silent meditation,
in well done askesis face glows in full; aspiring to scale the sky as though,
bees hover, buzz and hum in bevies in Maangaadu
I regard as thy court of your eye!

60 Courteous life has seen your austere Tapas; granting all
all wished for to propitiate punya. Is this all for your gold-feet
to tread on Earth endearingly? Every day grant my meagre
mundane but and ben your benign mighty good!

அளித்த கருணை யறமும் அடியவர்க் கங்கயற்கண்
களித்த தவத்திருக் காட்சியும் காதலால் கண்டுகண்கள்
துளித்த படியே தொழுதற்கு நின்னைத் தொடருகின்றேன்
தளிர்த்த மலரில் திளைக்கின்ற வண்டாகித் தேன்பெறவே 61

தேவி கடைக்கண் திறவாயோ! தெள்ளத் தெளிந்திடவோர்
ஆவி நிகர்த்த கவிதரு வாயோ! அகத்திரையில்
ஓவிய மாயெண்ணி உன்மத்த பத்தி உவகையுறக்
காவிய நாயகி நின்பாதம் வேதமாய்க் கற்கிலேனே 62

கற்றிலேன்; கற்றுக் கனிந்தநற் சான்றோர் கருத்தினில்யான்
நிற்றிலேன்; நெற்றிப் பிறைகாட்டி நேயம் நிதம்வளர்க்கும்
நற்றமிழ் நாயகி நின்னை நயந்திங்கு நான்பணிந்து
பற்றினேன்; பற்றிப் பற்றிலேன் பார்புகழ் பொற்கழலே 63

கழல்காட்டும் கார்வண்ணக் காதலி மாங்காடு காண்பார்க்குத்
தழல்காட்டும் ஐஞ்சுடர் மேல்நின்ற தையல்நீ; தாருகனை
அழல்காட்டும் வேலால் அழித்திங்கே ஆடிய அனல்விழியால்
நிழல்காட்டும் வாழ்க்கையில் நீசர்கள் நேயத்தை நீக்குவாயே 64

நீக்கும் கருமம் நினைந்திங்கு மண்மேல் நிறைவளிக்க
ஆக்கும் கரத்தால் அருள்நல்கி அன்பர் அகங்குழையத்
தேக்கும் செழுந்தேன் சிரிப்பை நகையாக்கத் தேமலராய்ப்
பூக்கும் புதுமலர்ப் பொன்னகை யும்நீதான் பூண்பதென்னே 65

என்னெஞ்சில் ஓயாத இன்னல்கள் என்னை இடர்ப்படுத்தப்
புன்னெஞ்சில் இன்னும் புலனாசை போகாமல் புன்மைசெய
வன்னெஞ்சில் இங்குநான் வாழ்ந்தது போதும் வளர்தவத்தாய்
உன்னெஞ்சில் அன்பில்லை யோஇந்த ஏழை உயர்வதற்கே 66

ஏகமாய் நின்றே எழில்தவம் செய்திங் கிலங்கும்சிவ
போகம் பெறவே புகுந்த புலவி புரிந்துகொண்டேன்
மேகம்சூழ் மாங்காட்டில் மெல்ல அசையும் மயிலெனவந்
தாகங் குழைந்தீசன் பாகம் விழைந்தாயோ அங்கயலே 67

61 Mighty Mercy and virtue given to servitors show up the scenes of askesis
through fair fish-like frisking Eye! ICHTHYS as though!
With love, discerning tearful eyes worship you! I follow you leading me,
a bee bickering with buds to honey the pollen there!

62 There, Devi , won't you open thine eye to sensitize the ocular clear,
won't you grant me soulful serenade of afflatus? On the inward screen,
I feel the plein air picture of you; zealous in bhakti, I sense a joy.
O, Epic Beauty, Vedas are thy Feet I am yet to learn!

63 Learned I haven't; found a niche in the hearts of the learned ones I haven't;
you show a crease of a crescent moon upon your forehead
to foster gnosis as a dulcet Damsel of Tamil; you, in submission cling to;
clinging, to naught else I cling but thy far famed kazhal cute!

64 Cute Kazhal featuring Mercy-nimbus hued Lady Love! For they that survey
Maangaadu, five-fold flame-petal borne Uma are you; Didn't you undo Taruka,
spewing fire, dancing spear, eye radiant blazing light declaring
the demon's extinction? Delete my low-down link and clear.

65 Clear the deed log,fulfill the earthy tenure by a weave of your arms that create,
conserve grace and ripen the servitors' hearts; honey sweet smiles last
and garnish the flower face blooming new every instant.
What a fragrant auric farina thy face is, What?

66 What hopeless wants hamper my heart and impede the beats?
Enter may you this frail fist of mine, sense-prone pace driven,
doing low. Enough, I have lived in such a rickety frame; lusisti ssatis!
Growing askesis you are! Why not perk this poor me up?

67 Up as ONE you reared; performed febrile Tapas to gain the not ungainly
Sivabogam,
experiencing Sivam. This much I could glimpse; on this cloud slobbered
Mango woodlands, gentle peacock-like, have you come to strut in
hemi-demi-semi-feminine quaver for Lord's part, O Fish-eyed Princess!

கயலாய் விரிந்திடும் கண்கள் சிவப்பக் கலந்திறைவன்
மயலாய் மருவியே மஞ்சத் தனைய மழைதருவிண்
புயலாய் அலைக்கும் புரிகுழல் கூந்தல் புறத்தசைய
அயலாய் அணிகின்ற அற்புதக் காதலின் ஆய்கலையே 68

ஆய கலைகள் அமுதூறும் சொல்லாளை அந்திவானாய்த்
தூய அனல்மேல் தொடர்ந்து நின்றாளைத் தொழுதுபோற்ற
வாய முதின்சொற்கள் வாராவோ? வாழ்நாளில் மற்றவரைக்
காய முறுசொல் கணப்போதும் கூறாமல் காத்தருளே 69

காத்தவள்; காக்கும் கரத்தவள்; கற்பகக் காமலராய்ப்
பூத்தவள்; உள்ளம் புகுந்தவள்; போற்றிப் புகழ்ந்திடவோர்
மாத்தவத் தால்மேவும் மாங்காட்டு மாண்பினள்; மேதினியில்
மூத்தவள்; மூவாமல் முன்நிற்கப் போய்மாளும் பொய்களுமே 70

பொய்விளக் கேற்றிடும் புல்லிய வாழ்வில் புகுந்தமனம்
மெய்விளக் கின்திசை மாறி மெலிந்திங்கு வாடுவதோ?
ஐவிளக் கேற்றி அனல்மேல் தவம்செயும் ஆரணங்கைக்
கைவிளக் காகிய காரிகை எண்ணாமல் கல்லானதே 71

கல்லாத குற்றமும் காணற் கினியாளைக் காணாதஅப்
பொல்லாத குற்றமும் போற்றிப் புகழாத புன்மைநாவால்
சொல்லாத குற்றமும் சோர்ந்த மனமும் செகம்நிறைந்த
எல்லாக்குற் றங்களும் போய கலும்நினை ஏத்துவார்க்கே 72

ஏத்தும் இசைப்பா இழைகின்ற பண்ணாகி இன்மனத்தால்
சாத்தும் மலர்ப்பா மணக்கின்ற செந்தமிழ்ச் சோலைதனில்
பூத்துக் குலுங்கிப் புதுமல ராகிப் பொலிந்துபுவி
காத்தும் கரந்தும் நடத்துமுன் நாடகக் காட்சியென்னே 73

காட்சியில் பொற்கதிர்க் கற்றையும் தாடகக் காதணியும்
ஆட்சியில் ஓங்கிய அங்குச பாசமும் அன்பருள்ளம்
மாட்சியில் கொண்டு மகிழும் மலரம்பும் மாண்புறவே
சாட்சியில் கண்டு சிறந்திட நல்லன செய்தருளே 74

68 Fish-eyed , fast in glance, glowing red in heat of conjugation with Lord,
maddened, nestling around you to couch in snow-foam, with rain-bearing
cloudburst of storming locks swinging side to side; and you from the top of run
rush to merge in miraculous love-art!

69 Art-bred art heartily chosen springs up as ambrosia in WORD thine;
as the twilight welkin of splendorous sundown or rise, abide you on pure flame!
Donnec flamma ! To worship and hail you would language minister
mature wordage? Hurting not, chasten my tongue, sweeten and save!

70 Saver is She; saving arms are hers; my heart is her entry!
to praise and glory askesis hot soaring Maangaadu
is her locale; on the outer vast of worlds all, elder is she;
in her unageing front die down all lies!

71 Lie-sloughed trivial life obsesses mind; deflects truth's radiance
and blurs the focus; should this occur here? As five-fold lampion flame-
a cenote made of it,-Tapas Tapas does! She indeed is the torch virgin pure
and handy! Hearts that echo not her stirs are vain hungry stones!

72 Stone- deaf to listen and learn, blind to behold her sweetness,
dumb to speak her praise though endowed with tongue of tongues,
saddened mind unhinged, and all such menacing ills
shall go up in flames for they that adore her highness!

73 High-serious musical chore turns in a tune; and sweetened mind offers
flower-verse in the arbor of Tamil classical; and herein , what may this be,
the scene of floral spray spilling new blooms to save, hide, seek
and conduct and run dramatic spectacle!

74 Spectacular golden bundle of rays in quanta, ear-pendant thaadakam,
signs of powerful reign in force as goad and cord, the dart of a flower
to quell the lover's heart- all these eye to eye seen,
won't you grant good and forthwith grace!

செப்பும் அறங்கள் சிறந்தோங்கச் செய்யவள் சேர்ந்தொளிரும்
நடையிலே நாயகரைத் தண்டென நிற்கும் தவத்தவளே
உய்ய வரும்அன்பர்க் கெல்லாம் கருணை உவந்தவளே
வையம் அளந்திங்கு வான்சுடர் ஏற்றிடும் வாழ்வியலே 75

வாழும் வழக்கிங்கு வண்டார்க்கும் மாங்காட்டில் வந்துநின்று
நாளும் ஒருதாள் தவம்செய்தாய்; யான்செய் தவமுமிங்கு
வீழும் பழக்கென்னை வீழ்த்துமோ? வித்தகி வெற்றிவந்து
சூழும் உளத்தில் சுடர்வாய் நெஞ்சகச் சித்திரமே 76

சித்தி வழியாகும் யோக நிலைகள், செகம்புகழும்
சத்தி வழியாகும் சார்ந்த உயிர்கள், சிறப்புடனே
முத்தி வழியாகும் மோனத் தவமும் முதல்வியவள்
பத்தி வழியாகும் பார்வதி யாலருட் பார்வையுமே 77

பார்க்கும் இடமெங்கும் பண்ணும் தவமே பரிந்துவினை
தீர்க்கும்; தியானம் திகழ்கின்ற தேவித் திருப்புகழை
யார்க்கும் கனிவாய் எடுத்தோதி இன்புறும் ஏழிசையாய்
வார்க்கும் உளத்தில் வடிவாய் இருந்திங்கு வாழ்த்திடுமே 78

இடுகின்ற குங்குமம் நெற்றிக் கணிகலன்; இன்னடிகள்
தொடுகின்ற கைகள்தாம் பத்திக் கணிகலன்; தூமனத்தில்
நடுகின்ற நல்லெண்ணம் முத்திக் கணிகலன்; தீவினைகள்
அடுகின்ற போதெம்மை ஆண்டருள் வாய்நல்ல ஆசியையே 79

ஆசி பகர்க்கும் ஆனந்த ஆழியில் ஆழ்வதன்றிப்
பேசித் திரிவதில் காலம் கழித்திங்குப் பேதையானேன்
ஊசி முனையில் உயர்தவம் செய்கின்ற உத்தமிபோல்
காசினியிலுண்டோ? கண்கண்ட தெய்விகக் காட்சிதாமே 80

மேவும் உலகினில் மெல்லிழை தோன்றி மனத்திரையில்
கூவும் குயிலெனக் கோல மயிலெனக் கொண்டுலவப்
பூவும் பொலிந்தநற் பொட்டும் மங்கலப் பார்வைதரத்
தாவிப் படரும் தளிர்க்கொடி காணும் தவமருளே 81

75 Grace all virtue she would in propriety; she, the Lady all luminous Light;
like stalk of Lotus stands she confirmed in poise of askesis;
pours compassion on the seekers that come to her queued in;
measuring the vast she sets the lamps of the sky eternal and live!

76 Life to live, for life, for all, you deigned to descend on
bee-hovered Maangaadu and as one with flaming locks you did Tapas there;
mine as I do I feel the fall. O, lady Talent, O,Cordial Picture,O, Splendor Supreme,
help from within to score the win.

77 Winning stairs of yoga shall by and by be stepped up; Cosmic energies
incommensurable shall fall in line within; Spores Universal shall verily ensconce
Mukhti in silent transcendence—a Tapas in alpha state! You the first shall make
the devout more devoted, as Parvathi's grace for pan-worlds to praise!

78 Praiseworthy is Tapas all around to see whereby deeds are undone;
meditation harps on the frets of Divine frame; holy cadences joy
and buoy up in strains as sevenfold notes sphere the lamps
hung in heart-space swell and swing to bless!

79 Blessed is saffron tilak mark on your forehead; sweet feet pair treat
when touched or sensed adorns the adoring arm; pure of heart,
as good will grows, the pearl jewel of Mukhti rounds to shape;
may you put out evil fires by nonpareil light of pouring grace!

80 Grace shall attend as bliss cascades from above into the main of moiety;
failing to go merged full fathom, alas, I whiled away the Spring-Catarrh of Time
in untamed folly here; on needle-tip Tapas topmost you do serve. None such
I see in what-I-Know-not-world. O, Eye-nourishing divine Opsis!

81 Cis-mundane world! A slimstreak of light looms across the canvas of conscious
cooing Koel-like, doing peacock like without doing it; a flower on flower fashions
a fine smile microfine to view; a face turns all gold; a tender climber cum creeper
swings up and spreads: grace me with eyes to see all and more!

மருளான என்றன் மனநோயை மாற்றி மகிழ்ந்திடவே
அருளான கண்ணால் அகிலம் அளந்தென் அகம்படிந்த
இருளான வாழ்வின் இடர்தீர உன்றன் எழில்முகத்தைத்
தெருளான உள்ளம் திருந்திட என்றென்றும் தேடுவனே 82

தேவாதி தேவர்கள் தேடிடும் தெய்வத்தைத் தேசொளிரும்
மூவாதி மூவர்க்கும் மூலமாய் நின்ற முதல்விதனை
நாவால் துதிக்க நலம்வரும் நல்லவை நாடமனம்
பூவா திருக்குமோ? பத்திப் பெருக்கினில் பொங்கிடவே 83

பொங்கும் உளம்புகும் புங்கவி; தங்கும் புவனமிதில்
எங்கும் இலங்கொளி யானநல் அந்தரி; என்உளத்தில்
சங்கம மான சடாதரி; சங்கரி; செந்நிறத்துக்
குங்குமச் சுந்தரி; சிற்றடி வைப்பாய் குலவுநெஞ்சே 84

நெஞ்சே திருவுடை மாங்காடு நித்தம் நினைகுவையேல்
மஞ்சே அனைய மலர்ப்பாதம் போற்றிய மாண்பதனால்
அஞ்சேல் எனஅவள் தஞ்சம் தருகுவள் அண்டமிதில்
நஞ்சே உளத்தில் நினைப்போர்க்கும் நல்வழி காட்டுவளே 85

காட்டும் கருணைக் கடைக்கண்ணில் காதல் கரைந்துருக
ஊட்டும் அமுதின் உவகையில் உள்ளம் உயர்ந்துவிட
நீட்டும் கரங்கள் நெகிழ்ந்திட அன்பினால் நீள்புவியை
வாட்டும் வினைகளை மாற்றிட வந்த வளர்நெறியே 86

நெறிவளர் கண்ணில் நிறுத்திய நின்தவம் நேயனையே
குறித்த மனத்தைக் குணங்கொண்டு போற்றும் குவலயத்தில்
பறித்த மலர்போன்ற பாவையே! யான்செய்த பாவமுந்தாம்
மறித்த பிறகும் மறுகணம் தோன்றுமோ? மண்ணிடையே 87

மண்ணில் திரியும் மனமேநீ மாங்காட்டின் மாண்பினளை
நண்ணி வரும்போதே நன்மை வளர்ந்தங்கு நெஞ்சுவந்து
பண்ணிய பூசையில் பத்தியை நாட்டிப் பலர்புகழும்
திண்ணிய வாழ்வுறத் தேவியள் நாளுமே தோன்றுவளே 88

82 More of a murk is manam mine; mend it, cleanse it, make it mirthful; grace-rich eyes
may scale all worlds and space to pitch on the dark of life, I am dumped in.
For all ban to go banned show thy elegant tilt of face on the car-street veins
of my frenzied frame, for I am desperate to search!

83 Search for you, Devas do; searching after the deity of supreme theme!
Aren't you the first , 'Mangkai' revealed and revealing? The root source
of all trinities of trinities, aren't you! If Tongues beg to worship you,
ensues good;flowers manam; swells Bhakti rising!

84 Singing heart chamber-entering Mentor Maiden! On the triple worlds of becoming,
being and become, you pervade as anthariksham: Empress Empyrean!
To me confluence are you! O, Sankari auspicious, O,Jatadari with long locks
as tongues of flame, O, Sanguine Sakthi, walk thy steps on arteries of my heart!

85 O, Heart were you to beat and pump on weal-rich Maangaadu
day in day out, foam shaming flower feet propitiating She would serve
a suite secure saying ' fear not': On this egg-egg and big-egg,
even venom-doting evil would be veered to ways of verity!

86 Verity votive mercy-eyes of melting love, nectar fed blithesome heart
in toned up throb , stretched arms loosened in love of love
to lock in and embrace more—and thus and hence,
the dinghy earth-ailing deeds turn pure in curing discipline!

87 Leaning on to ethical poise of focus, me doting divinely on your Tapas,
seasoned my heart; may you cherish mine;O, Picked flower of the World
a-swim in Space!Once sins are undone, do they mushroom
again from nowhere, and pullulate in the slime!

88 Slimy manam meanders on the maze of muddy mundi;
but even as we near Maangaadu goodness with ardor grows;
heart calmed, worship Bhakti filled proceeds in steadfast Faith;
and life confirmed is Devi's GIFT: SHE shows up for ever!

தோன்றும் தவத்தால் இடதுகால் தீயிடைத் தோய்திறனும்
ஊன்றும் வலப்பாதம் நாபிக் கமலத் துயர்த்தியொளி
சான்ற இதயத்தில் சின்முத் திரையும் திகழ்நெற்றியில்
ஞான்ற மணிகொண்ட கோலமும் கண்களில் ஒன்றிடுதே 89

ஒன்று முளத்தால் உனையே தினமும் உவந்திடவும்
நின்ற தவக்கோலம் நெஞ்சில் ஒளியாய் நிலைத்தபின்னும்
நன்றென நீயும் நயந்திங்கு மண்ணில் நலந்தரவே
மன்ற தனில்மேவி மாங்கா டுறைந்தாயோ வானமுதே 90

வான முதான மழையினைக் கண்ட மயிலெனவந்
தானந் தமானத் தமிழென நின்று தவம்பயின்றாய்;
தேன முதாயென் தெளிந்த இதயம் சுடர்ந்தொளிர
ஞானத் துளியினை நாளுமே பெய்திடும் சிந்தனையே 91

சிந்தனை தந்தாய் செயல்பல தந்தாய் சிந்தனையில்
வந்திட நல்வரம் தந்தாய் தமிழின் மணம்கமழ
கந்தனைத் தந்தாய் களிகொண்ட நெஞ்சில் கனங்குழையாய்
நிந்தனை இல்லா நிலைதந்தாய் தேவியே தெள்ளமுதே 92

தெள்ள முதான திருவடி சேர்ந்து திகழவருள்
வெள்ளப் புனலாழ்ந்து வெற்றிக் கரையேறி வீற்றிருக்க
உள்ளக் களிப்பெய்தி உன்னைத் துதித்துள் ளுருகிநின்றேன்
விள்ளற் கரிய வளே;விண் ணுலகின் விரிசுடரே 93

விரிசுடர் தாங்கிய விண்ணென ஓங்கிய வித்தகியுன்
எரிசுடர் ஐந்தின் இலங்கொளி நல்கும் எழில்நலத்தால்
பரிசுடர் ஆகியே பாயிருள் நீக்கப் பரிந்துவந்தாய்
திரிசுடர் ஆற்றல் திகழ்ந்திடத் தோன்றிய தண்டமிழே 94

தண்டா ரனைய தளிர்க்கரம் காட்டித் தடம்பொழிலின்
வெண்டா மரைதனில் வீற்றிய செல்வியர் வேண்டிடவும்
கண்டார் வியக்கக் கரும்புவில் கொண்டு களம்புகுந்து
பண்டார சுரனை யழித்தாய் புகழ்வதுன் பன்னலமே 95

89 For ever showing one foot in flame-sea, dipping deep, one right plumbing
as pillar flame,a navel lotus rises high; it lumen-stamen signals
the semiotic release of hold and hold of release in single orgy;
and brilliant forehead wears a pendant-stone-all these dazzle our eyes at once!

90 One'd with heart, one'd with you, daily gaily it plays its beats in frolic;
our fair Tapas Opsis pours and fills light all over through every chink and pore;
well, you have come upon Earth to grant all good staging thyself
in Maangaadu, your decor, as celestial ambrosia !

91 Ambrosial lisp celestial! Peacock-proud strut! Tamil's sui generis
entelechy! Tapas you cultivate! Honey you clarify!
Bloody heart now glows in gnosis; drip, drip, drip,
through mercy-moist cogito sheer!

92 Sheer thought you gave;acts too; boons thereof to advent oft;
for Tamil's fragrance to spread; Skandha you gave, his sparks and hold,
Pleiades and Pillar! In blithesome heart as a mighty stroke of fortune
dear you hang on, firm, all benign, O, Devi, O, Clear Nectar!

93 Nectar numinous are thy holy feet; clinging to which, submerged in the main
of grace-floods, then shored up on the banks of triumph, with bridal banqueting,
soul mine is cornered in you melting to the core; too fine to capture or rapture
are you, the radiance of Space-and- Eternity!

94 Radiance laden Space coning up above as Talent are you
with welling five-fold flames, a quincunx zodiacal, you grant elegant Tapas-fruit
as Ram-Sun's Rim and Agni's Arm to dispense inundating dark;
comely with compassion
the power of triple fires fostered warm our hearth as triple Tamil cool!

95 Cool lotus stalk like tender arm you show; in arbor gardens you abide
on lotus white;Dames opulent pray you; for the seers to marvel
you did arch a sugar cane,enter the field and end Bandaasura!
Your many a mighty win we praise.

பன்னலம் காட்டிப் பரமனோ பாடிய பார்வதியாய்
பொன்னொளிர் மேனி பொலிந்திட ஈசன் புகழ்பெறவும்
தன்னையே தந்த தளிரிடை கொண்ட திரிபுரையுன்
மென்னலம் கண்டபின் மேவிடும் கண்களும் மூடுவதே 96

மூடிக் கிடக்குமென் மோன இதயம் முகிழ்த்திடவும்
நாடித் திறந்து நளியிருள் நீங்கி நலம்பெறவும்
தேடிச் சரண்புகுந் தேன்தேவி உன்னையே தீந்தமிழால்
பாடித் தொழுதிப் பண்ணிசை மீட்டிப் பரவுவனே 97

பரவும் அடியும் பரத மிடுங்கண்ணும் பங்கயமாய்
விரவும் முகமும் விரிந்த குழலும் விளங்கொளிரும்
அரவும் நிலவும் அணிந்த அமலன் அடிதொழநீ
இரவும் பகலும் இழைத்த தவமும் இதஞ்செய்யுமே 98

செய்ய திருப்பாதம் செண்பக மோ!முகம் சேர்ந்தொளிரும்
வெய்ய விளக்கோ! விரல்களும் காந்தளோ! வையகத்தில்
மையல் விழிப்பார்வை மானோ! மயங்கி வயமிழக்கும்
பொய்யாம் மருங்குல் பிடிநடை கொண்டதோ பேரெழிலே 99

பேரெழில் நல்கும் பெருமைசேர் அன்பும் பெருகிவரும்
காரென ஓங்கும் கருணை மழையும் கதிர்மதியாய்
ஏரெனப் பூத்த இலங்கு முகமும் இனியநெஞ்சத்
தேரென வந்தின்பத் தேனைப் பொழிந்து திகழ்ந்திடுதே. 100

96 Praised several feats of thine recounted, you are Parvathi paired
with Parameswara. Your golden light of mien glows quenchless ever;
Lord's pride are you and his envied sovereign queen of Tripuram too!
To watch all thy tender traits eyes jealous open wide and close to lock you in!

97 Inlaid is the silent thud-free heart deflowering in heat; the neural knots extricate;
the pitch dark takes leave; I sought and found surrendering to you.
O, Devi, to sing in theme-rich Tamil and hymn and hail your feet
all day long let me weave a paean of panns and pray!

98 Pray foot-work of thy feet! Pray eyes a-dance, lotuses abloom,
face favors,spread locks spill supernal light; serpent and crescent
duly pent ,in places due, the Flawless ONE hails you night and day
for the Tapas thine of fires comforting!

99 Aren't thy holy feet Dok Champa flowers pink! Is thy face
a luminous lamp's index! Are thy fingers henna red oleander buds!
Isn't thy look mocking the luring doe's! Charming to swoon and fawn upon as if,
isn't your waddle she-elephant's in all elegance!

100 Great pulchritude granting, o, famed Love! Storming scuds
of compassion raining ! Sun-Moon round face in doublet
of changing charms! Flowers-All in Sweetheart! O, thou art that
chariot wheeling in and out to honey-wet Earth and brown the trail ablaze!



## TIRUVERKAADU DEVI KARUMAARI ANTHAADI

I am blessed to record the way I felt passaged through in the act of rendering the pious work, in an alien syntax:

Oftentimes in poetic outburst incongruous concomitants occur. Popular lyricists are seldom free from psycho-physiological concomitants of language.

(May our students excuse us?)

Even when they pose to be free a pearl snarls or agate cuts! And incongruities tease. An instinct Electrodermal sort of reading, so to say, germane to me, made me grieve over this cide-effect!

In devotional pious literature this never happens; for the language therein is the limit of a world that is the case.

And so it is with yours,Guruji, in your well wrought Tiruverkaadu Devi Karumaari Anthaadi. I am between poetry and spirit. Translation is neutral in terms of propositional commitment

For example, Bhakti, Grace, Eye, Love, Left, Birth, Earth, Heaven and all are differences in their synonymous functions; if Bhakti be Snathana, say, or Grace be Semitic, say, the difference is exponential function!

Where there is pure poetry, language is non-accidental.

As it is difficult to outnumber number, in exponential function of it, so too it is difficult to outline a line in devotional works. For, such works, silently leave us assured that only uniform connections are thinkable.

The mystical happens.

It is impossible for us not to know that the different names of Karumaari are synonymous; and it is impossible for us not to be able to translate them into one another.

Tiruverkaadu on Earth is infinite Space, left by tautology to reality;

ertainly we are led by Guruji; possibly we are told by Guruji;

impossibly the space in one hid and the space in one opening the hid laid bare to see is mentioned by Guruji.

How can a translator not miss by oversight the indication of a gradation he needs

in the theory of a probable equivalence to the place and Ens as names!

The essence of anything symbolic cannot be altered without altering it sense, sensed via senses.

Piety thy name is prayer. But in a prayer sequence , every verse as a general form is a variable!

Even when as a devoted reader, I tried to infer, the inference mine takes apriori

Why I was easily drawn to think along as he thought has no causal nexus

My belief is no superstition; and there is little causal necessity when translating is tautological stent!

I felt I was in the substance-proof centre, a point, a bindu in the trigonic mandala the syllables in guruji's composition.

I could feel the concept of successive application; thus rendering again in a distant syntax to me, to the original's as well is but 'and so on'.

Sivasakthi more than a combinatory WORD turned a new expedient calling for explanations.

Experiencing the pious is a punctuation: '!' Is punctuation evident in itself or is the line so punctuated on its behalf is a double question !!

Russell's Axiom of Infinity suffers. All names of goddess mean alike.

So, in translating or in attempting to translate something precedes the act:

That Something is so which is before the HOW, not before the WHAT.

I am microcosm; the aspirant in piety, in solipsism, shrinks to an extension-less point, the 'bindu', as invisible as modus ponens is inexpressible. ence ouside the original all is accident! How can birth or passage of time be translated in the sense of an asymmetric occurrence of one alongside the absence of another. The reader must lie outside the world;

I close my confession quoting a verse from Tiruvaachakam :

"Lie am I; so is my heart, also my love;
deed-worn weep if I do, yet, you may be got at;
O, Honey, Ambrosia, Cane Juice, clear and sweet,
O, Lord of Relish, grace me to be drawn to thee, won't you?"

(Tiruvaachakam Verse 08105090 Trans. mine)

**S.A. Sankaranarayanan**



## MAANGAADU KAMATCHIAMMAN ANTHHAADI

Mango is 'KAITTHALA NIRAI KANI', A Fruit Full on the Palm Top.Devotee Deity knows.In an ageless language subject to none , there is no suede to hide pure privacy inviolable.

KAI, THALAM, NIRAI, kani are syllables and sounds that recur in the catenative verbal train of Bhakti: A spiritual vestibule! This work of the author is no ordinary one. In one aspect this isSivasakthi Tirucchatakam! Maangaadu is Space; never will it be curtains there! Nor can any try backspace.Author's adoration ofAmman is an all time ambrosial menu that entails reader's viewing: See, seek, seek, and see.

Impermeable needle tip of Tapas, a translucent flame-sign rooting into the sky! A claustral liquified light. past the discourse. The mortally proud clown in the reader can hardly skirmish with words of grace. Isn't there vantage none you could see to defend your hard won birth?,when I read , the question rang!

Translation is always mediocre, who can proof-read Bhakti! Kamakshi is all eye of mercy-complement to rudraksha! Beads tell telling beads all the pinches of Veena-Veda Axe of Sivam as Sakthi. From andakaaram to light, we get born every dawn. Names bespeak amrta devakoshtam.

Kamakshi, is Aampravanavaasini on Tamraparani, Sankari is Sankara Yuvathi, Deekshidar's addressing of Kanthimathi! Umasahitamurtaye namaha! Thanks to grace, Bandasura is nefarious flu but the flu is ended. In a somewhat come-what-may-fear, I read and wrote.

This anthhaadi is ati madhuram all by the grace of Grace of Lady Licorice! I am umbra, Guruji like KGS-TNR is lux! Some adumbration! Lux est umbra dei!

In the estate of letters Bhakti neri contains some inevident colophon: to go obsolete into the woods as Dante is to be; is to live legitimate births human from exordium;On reading I prefer to to be older than millennia and still run for the woodland's grace not without dust and heat!Read, now is won in a palindromic breath move! Author asks us to note the Feet and on getting asked thus,Devi's Eye foot-note them that do as asked!

Guruji is greatly blessed to cry and thaw in love of goddess's grace. Translation is but a trace of fellow feeling and comminatory power to feel some foreignness sorelybecause of a specious syntax silently emending the domain.

Tears glisten.

'I' remain. sishyati iti sesham

**S.A. Sankaranarayanan**

